பத்மாவும் 'இன்டர்மீடியட்' தேறினள். ஆனல் அவள் பி. ஏ. யில் சேரவில்லை. அவளுடைய அப்பா அடுத்த ஜூலையில் 'எம்.பி.பி.எஸ்.' ஸுக்குப் படிக்கச் சொல்லி எழுதியிருந்தார். ஆகவே, அவள் அது வரை காத்திருந்து வைத்தியக் கல்லூரியில் சேர்ந்தாள்.

இந்த ஒரு வருஷத்தில் ரங்கன் அந்த வீட்டில் ஒருவனுனன். அவன் இல்லாமல் அந்தக் குடும்பத்தில் ஒரு பண்டிகை நடக்காது. அவனைக் கேட்காமல் செல்லம்மாள் ஒன்றும் செய்யமாட்டாள். பல விஷயங்களில் அவன் வைத்ததே சட்டமாகக்கூட இருந்தது. புருஷத் துணை இல்லாதிருந்த அவர்களுக்குப் பாண்டுரங்கன் அவனுடைய குறைந்த உலகானுபவத்தைக் கொண்டு ஒத்தாசை செய்து வந்தான்.

செல்லம்மாள் ஆரம்பத்திலேயே அவனிடம் பட்சமாய் நடந்து கொண்டாள். 'என் பிள்ளை' என்று அருமையுடன் சொல்லிக் கொண்டாள்.

பத்மாவும் நாளடைவில் தன் பயத்தையும் வெட்கத்தையும் போக்கிக் கொண்டாள். அவன் கேட்டால் பதில் சொல்வது என்று தொடங்கி, தானே சந்தேகம் கேட்கும் அளவுக்கு அவள் முன்னேற்றமடைந்தாள்!

ஆயினும் அந்த வீட்டில் அவனுல் ஓரே ஒரு ஆத்மாவைச் சரிக்கட்டிக் கொண்டு போக முடியவில்லை. அவள் தான் சரோஜா. முதல் நாளன்று, "இவன் யாருடி?" என்று கேட்டதிலிருந்தே, சரோஜா அவனிடம் விவரமில்லாத—காரணமற்ற—ஓர் அருவை கொண்டாள். ரங்கன் மனோதத்துவ விசாரணையில் இறங்கி, தீவிரமாக ஆராய்ச்சி செய்து பார்த்தான். ஆயினும் அவனுல் சரோஜாவின் மனதை அறிய முடியவில்லை.

* * *

காலச் சக்கரம் மேலும் சுழன்றது. மூன்று வருஷங்கள் சென்று விட்டன. ரங்கன் பி. ஏ. 'பாஸ்' செய்துவிட்டு, ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் 'டைபிஸ்ட்' வேலை பார்த்து வந்தான். பத்மா வைத்தியக் கல்லூரியில் இரண்டாவது வருஷமும், சரோ, 'இன்டர்மீடியட் சீனியர்' வகுப்பிலும் வாசித்து வந்தனர்.

இந்தச் சமயத்தில்தான் பத்மாவுக்கு உடல் நலம் கெட்டது. அவள் படுத்த படுக்கையானள். ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். அவளுடைய அப்பாவுக்கும் தந்தி கொடுத்தார்கள். அவர் உடனே புறப்படுவதற்கு முடியவில்லையென்றும், இருபது நாட்களுக்குக் குறையாமல் ஆகும் என்றும் பதில் தந்தி கொடுத்து விட்டார். வேறு வழியின்றி செல்லம்மாளும் ரங்கனும் விசேஷ கவனம் செலுத்தி, பத்மாவுக்குச் சிசுருஷை செய்து வந்தார்கள்.

சரோஜாவும் கவலையுடன் நடமாடினள். ஆனல் அவளுடைய இளம் உள்ளத்தில் சகோதரியைப் பற்றிய கவலையை விட, வேறொரு கவலை பெரிதாக இருந்தது.

"இந்தப் பாண்டுரங்கனுக்கென்ன இத்தனை அக்கறை, அக்காவிடத்தில்? நமக்கில்லாத அக்கறையா இவனுக்கு?...இந்த அக்காவும், அம்மாவும் ஏன் இப்படி அவனிடம் ஒட்டிக் கொள்கிறார்கள்...!"

இதுவே ஒரு பெரும் புதிராக அவள் மனதைச் சுற்றி வட்டமிட்டது. அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அதற்கேற்றாற் போல் ஒரு நாள் பத்மாவுக்கு ஆஸ்பத்திரியில் ஆரஞ்சுப் பழரஸம் கொடுக்கலாம் என்று கூறியிருந்தார்கள். அப்பொழுது தான் சரோஜா ஒரு பழத்தை எடுத்து உரிக்கத் தொடங்கி



பாண்டுரங்கன். அதற்கும் அவள் பதில் சொல்லவில்லை.

அன்று சாயந்திரம் பத்மாவை வீட்டுக்கு அழைத்துச் செல்ல அவள் தாயார் செல்லம்மாள் வந்திருந்தபோது பாண்டுரங்கன் தன் குறையை வெளியிட்டான்.

"பாருங்களம்மா! நான் கேட்ட கேள்விக்குப் பத்மா பதிலே சொல்லமாட்டேனென்கிறாள்!" என்றான்.

"ஏண்டி பதில் சொல்லவில்லை?" என்று செல்லம்மாள் பத்மாவைக் கேட்டாள். பத்மா மௌனம் சாதித்தாள்.

"நம்ம பாண்டுரங்கன்தானே, பேசினால் என்னடி?" என்று தாயார் அவளைக் கடிந்து



கொண்டாள். மூவரும் வீட்டை நோக்கிக் கிளம்பினார்கள்.

யாரோ வரும் காலடி ஓசை கேட்டுக் கதவைத் திறந்த ஒரு பெண் தன் தாயாருடனும், சகோதரியுடனும் ஓர் இளைஞன் நிற்பதைக் கண்டு, வெட்கத்துடன் உள்ளே ஓடிவிட்டாள். செல்லம்மாள், "அவள்தான் என் இளைய பெண் சரோஜா; ஆறாவது பாரம் வாசிக்கிறாள்" என்று பாண்டுரங்கனிடம் கூறினாள்.

"பத்மம், ச ரோ ஜ ம் — நல்ல மலர் ஜோடி!" என்று கூறிச் சிரித்தான் பாண்டுரங்கன்.

"ரங்கா! அவளைக் கேலி செய்யாதே! அவளுக்குக் கோபம் வந்துவிடும்" என்று எச்சரித்தாள் செல்லம்மாள்.

இதற்கு மத்தியில், "இவள் யாருடி?" என்று சரோஜா மெதுவான குரலில் பத்மாவைக் கேட்டதும், பத்மா, "உஷ்! அவர் என் 'கிளாஸ் மேட்'!" என்று இன்னும் மெதுவாகப் பதில் கூறியதும் பாண்டுரங்கன் காதில் விழுந்தது.

செல்லம்மாள் அதற்குள், "மாமாவைப் பற்றி உனக்குத் தெரியுமா? உயர்ந்த உத்தியோகத்தில் இருக்கிறார். சிம்லாவில் கவர்ன்மெண்ட் ஊழியில் வேலை!" என்று கூறினாள்.

"அடேயப்பா! மலையுச்சியில் வேலையென்றால் உயர்ந்த உத்தியோகம் என்று அர்த்தமோ?" என்று பாண்டுரங்கன் கேலி செய்தான்.

"மாதா மாதம் எங்கள் செலவுக்கு மட்டும் ஐந்நூறு ரூபாய் அனுப்புகிறார், தெரியுமா?" என்றாள் அவள்.

"அதுதான் ஒன்றுக்கு நாலு தடவை பரீக்ஷைக்குப் போகிறாப்போலிருக்கிறது!" என்றான் அவன்.

"இதோ பார், நீ உன் குறும்பை விடப் போகிறாயா, இல்லையா?" என்று வேசாகக் கண்டித்தாள் செல்லம்மாள். அப்போது அந்த ஹாலைக் கடந்து சென்ற சரோஜாவின் முகத்தில் கோபம் பொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டான் பாண்டுரங்கன்.

## 2

பாண்டுரங்கனுக்கும் அந்தக் குடும்பத்துக்கும் தொடர்பு உண்டாகி ஒரு வருஷமாகி விட்டது. அவன் செப்டம்பரில் தேறி விட்டு, 'கன்காண்ட் கோர்'வில் சேர்ந்து பி. ஏ. வுக்குப் படிக்கத் தொடங்கினான்.

# சகோதர வாஞ்சை

சு. ரா

“டப்...டிப்...டப்...டிரிணிங்!”

பாண்டுரங்கன் ஒரே கவனமாக ‘டைப்’ அடித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது வேலைக்கார முனியன் வந்து, “ஸார்! உங்களை யாரோ ‘போ’னில் கூப்பிடு கிறாக!” என்றான்.

பாண்டுரங்கன் உடனே டெலிபோனை நோக்கி ஓடினான்.

“ஹலோ! ... யார் ... சரோஜாவா? ... ரொம்ப ‘ஸீரிய’ஸாவா இருக்கு?...உடனே வரச் சொன்னாரா?...சரி; இதோ புறப் பட்டு வருகிறேன்!” என்று பேசிவிட்டு, ‘போ’னைக் கீழே வைத்தான் அவன். அவனுடைய முகத்தில் கவலைக்குறிகள் படர்ந்தன. சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தை நோக்கினான். மணி நாலேகால் ஆகியிருந்தது. ஆபீஸ் விடுவதற்கு இன்னும் முக்கால் மணி நேரம் இருந்தது.

முனியன் அக்கறையோடு, “என்ன ஸார், ‘போ’னில் என்ன சொன்னாங்க?” என்று கேட்டான்.

“அதை ஏன் கேட்கிறே, போ! நம்ம வீட்டு மனுஷாளுக்கு உடம்பு சரியில்லே; ஆஸ்பத்திரியிலே கொண்டுபோய்ப் போட்டு வைத்திருக்கோம். இப்போது ரொம்ப ‘ஸீரிய’ஸாக இருக்காம்” என்று அவனுக்குப் பதிலளித்துவிட்டு, வேலையைக் கவனிக்க ஆரம்பித்தான் பாண்டுரங்கன்.

ஆயினும் அவன் மனம் அதற்குமேல் வேலையில் செல்லவில்லை. ‘டைப் ரைட்டர்’ மட்டும் ‘டப் டிப்’ என்று ஓசை செய்து கொண்டேயிருந்தது. கை ஓடிற்றே தவிர, மனம் ஓடவில்லை. ஆஸ்பத்திரியில் உள்ள ஜீவனைப் பற்றிய சிந்தனையில் அவன் மூழ்கி விட்டான்.

• • •

மூன்று வருஷங்களுக்கு முன் பாண்டுரங்கன் ‘நேரு டியூடோரியல் காலே’ஜில் படித்துக் கொண்டிருந்தான். அந்த வருஷம் தான் அந்த ‘காலேஜ்’ ஆரம்பிக்கப்பட்டிருந்தது. அவனையும் சேர்த்து ஐந்து பேர்தான் சேர்ந்திருந்தார்கள்.

‘காலேஜ்’ தொடங்கிப் பத்து, பன்னிரண்டு நாட்கள் ஆகியிருக்கும். அன்று கல்லூரி வாசலில் பாண்டுரங்கன் நின்று தன் நண்பன் ஒருவனின் வரவை எதிர்நோக்கியிருந்தான்.

அப்பொழுது ஒரு வயதான அம்மாளும், ஓர் இளநங்கையும் அவனை நோக்கி வந்தார்கள். வயதான ஸ்திரீ பாண்டுரங்கனைப் பார்த்து, “ஏனப்பா! ‘பிரின்ஸிபால்’ அறை எங்கே இருக்கிறது? என் பெண்ணை ‘அட்மிட்’ பண்ணனும்; அவரைப் பார்க்கணும்” என்றாள்.

“எந்தக் ‘கிளா’ஸில் சேர்க்கப் போகிறீர்கள்?” என்று பாண்டுரங்கன் விசாரித்தான்.

“இண்டர்மீடியட், மூன்றும் பகுதி மட்டும் இருக்கிறது. அதற்குத்தான் சேர்க்கணும்” என்றாள் அந்த அம்மாள்.

“அடடே! என் கோஷ்டிதானா?” என்று பாண்டுரங்கன் சிரித்தவாறு கூறினான். அந்தப் பெண் வெட்கத்துடன் தன் தாயாருக்குப் பின்னால் ஒளிந்து கொண்டாள்.

பாண்டுரங்கன், “வாங்கம்மா! ‘பிரின்ஸிபா’லிடம் போகலாம்” என்று அவர்களை அழைத்துக் கொண்டுபோய், “ஸார்! இன்று நான் உங்களுக்கு ஒரு புது ‘ஸ்டூடண்ட்’ பிடித்து வந்திருக்கிறேன்” என்று அவருக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

கல்லூரித் தலைவர் அவர்களை அமரச் செய்து எல்லா விவரங்களையும் விசாரித்தார். அந்தப் பெண்ணின் பெயர் பத்மா என்று தெரிந்ததும் பாண்டுரங்கன், “எனக்குக் கூட பத்மா என்று ஒரு தங்கை இருந்து இறந்து விட்டாள், ஸார்! ஆனால் அவள் என்னைப்போல் ‘மக்கு’ இல்லை, ஸார்!” என்றான்.

எல்லோரும் சிரித்தார்கள்.

பத்மா கல்லூரியில் சேர்ந்து படிக்கத் தொடங்கினாள். ஒரு நாள் பாண்டுரங்கனும் பத்மாவும்தான் வகுப்புக்கு வந்திருந்தார்கள்.

“பத்மா! இந்தத் தடவை எப்படியாவது ‘பாஸ்’ பண்ணிவிட வேண்டும், தெரியுமா?” என்றான் பாண்டுரங்கன்.

பத்மா பதிலே சொல்லவில்லை.

“பதில் சொல்லமாட்டாயா? அம்மாவிடம் சொல்லிவிடுகிறேன், பார்!” என்றான்

# கல்யாணமா?

2000 டிஸைன்களில் — பட்டுச் சேலைகள்
விலை ரூ. 10 முதல் 700 வரை

4000 டிஸைன்களில் — நூல் சேலைகள்
விலை ரூ. 5 முதல் 60 வரை

1000 டிஸைன்களில் —
பட்டு - நூல் வேஷ்டிகள், அங்க வஸ்திரங்கள், வாயில், ஷர்ட்டிங், கோட்டிங், மில் ஜவுளிகள் இன்னும் பல

பெங்களூர், பெனாரஸ், பெங்கால், பம்பாய், கல்கத்தா, கொள்ளேகாலம், ஆரணி, காஞ்சிபுரம், சேலம், கோயமுத்தூர், ஜம்மல்மடுகு, முதலிய ஊர்களில் நெசவுத் தொழில் நிபுணர்களால் நெய்யப்பட்டு அற்புதமான முந்திகள் அழகான பார்டர்களுடன் கொண்டு வந்து குவித்துள்ளோம்.

மலிந்த விலைகள் உயர்ந்த ரகங்கள்

இன்றே வந்து பார்வை யிடுங்கள்!

## கஸ்தூரிபாய் கம்பெனி

உயர்தர பட்டு நூல் ஜவுளி வியாபாரிகள்

மேல வீதி :: சிதம்பரம்



# தீராத இருமல், ஜலதோஷம் இன்புளுயன்சாவுக்கு
## உங்களுக்கு பெப்ஸ் தேவை

ருசியுள்ள பெப்ஸ் மாத்திரை, மருந்து சத்துக்களை சுவாசத்துடன் கலந்து வியாதிக்கு மூலமான பாகத்திற்கு அனுப்பி, துரிதமாக குணமளிக்கின்றன. பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும் போதே அதன் உயர்ந்த கிருமி நாசன மருந்து சத்துக்கள் இருமலை நிறுத்தி, வெந்துபோன சுவாசக் குழாய்களுக்கு இதமளித்து, கிருமிகளைக் கொன்று, சளிக் கட்டைத் தகர்த்து மார்புக்கும் தொண்டைக்கும் விரைவில் குணமளிக்கிறது.



படத்தில் பெப்ஸ் மருந்து சத்துக்கள் எப்படி சுவாச மார்க்கத்தின் ஒவ்வொரு பாகத்தையும் அடைகிறது என்பதை விளக்குகிறது.

# PEPS

சுவாச, இருதய க்ருமி நாசன மாத்திரைகள்
தொண்டை, சுவாசாசயம், மார்பு நோய்களுக்கு நிவாரணமளிக்கும் சிறந்த ஔஷதம்



ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா அண் கோ., பி. டி. மதராஸ்

யெழுத்தை வாங்கிக் காட்ட வேண்டுமென்றும், இந்தப் பாரத்தைத் தங்கள் மூலமாகவே இந்திய ஜில்லா நீதிபதிகளுக்கு அனுப்ப வேண்டுமென்றும் செலாவணி அதிகாரிகள் முதலில் ஒரு உத்தரவு போட்டனர். அதன்படி இந்தியர்கள் 29-ம் நம்பர் பாரத்தை வாங்கி அதில் செலாவணி அதிகாரியின் ஒப்பத்தைப் பெற்று இந்தியாவிலுள்ள ஜில்லா நீதிபதிகளுக்கு அனுப்பி வந்தார்கள். இரண்டு வாரங்களுக்கு முன் செலாவணி இலாகா எவருக்கும் சொல்லாமல் திடீரென்று இதில் ஒரு மாறுதல் செய்தது. அதாவது, 29-ம் நம்பர் பாரத்தை ஒவ்வொருவரும் நேராகவே ஜில்லா நீதிபதிகளுக்கு அனுப்பி, அவர்களிடம் கையொப்பம் வாங்கலாமென்றும் செலாவணி இலாகா மூலமாகத்தான் அனுப்பவேண்டுமென்ற கட்டாயமில்லையென்றும் புதிய உத்தரவு பிறந்தது.

ஆனால் இதைப் பற்றி இலங்கை சர்க்கார் இங்குள்ள இந்திய ஹை கமிஷனருக்கோ அல்லது சென்னை, டில்லி சர்க்கார்களுக்கோ தகவல் கொடுக்கவில்லை. இதன் பயனாக இங்குள்ள இந்தியர்கள் இந்திய ஜில்லா நீதிபதிகளுக்கு ஒப்பத்திற்காக அனுப்பும் பாரங்களெல்லாம் "செலாவணி இலாகா மூலமாக அனுப்புக!" என்ற குறிப்புடன் ஒப்பம் போடாமல் திரும்பி வருகின்றன. இதற்குக் காரணம் என்னவெனில், புதிய ஏற்பாடு இந்திய ஜில்லா நீதிபதிகளுக்குத் தெரியாது. அவர்களுக்கோ அல்லது இங்குள்ள இந்திய ஹை கமிஷனருக்கோ தெரிவிக்காமல் போடும் புதுப் புது உத்தரவுகளைப் பற்றி ஸ்ரீ கிரியின் காரியதரிசி ஸ்ரீ என். இ. எஸ். ராகவாச்சாரி இலங்கை சர்க்காரிடம் மிகவும் கடுமையாக ஆட்சேபித்திருக்கிறார் என்று தெரிகிறது.

# லண்டனில் கர்நாடக சங்கீதம்

லண்டனில் கர்நாடக சங்கீதம் என்றால் ஏதாவது ஒரு தென்னிந்தியர் இங்கே செய்த பாட்டுக் கச்சேரியைக் குறிப்பிடுகிறேன் என்று நினைக்கலாம். ஆனால் நடந்த கச்சேரி தமிழரால் செய்யப்பட்டதல்ல. ஒரு ஐரோப்பிய இளைஞரால் சுமார் ஒரு மணி நேரம் செய்யப்பட்ட சுத்த கர்நாடக சங்கீதத்தைப் பற்றித்தான் எழுதுகிறேன். இந்த இளைஞரின் பெயர் ஜான் பார். இவர் சுமார் ஆறுமாத காலம் இந்தியாவில் மிலிடரி வேலை சம்பந்தமாகச் சிற்சில பகுதிகளில் வசித்து வந்தாராம். முக்கியமாக இவர் பங்களூரில் தங்கி இருந்தபொழுதுதான் தென்னிந்திய சங்கீதம் இவர் மனதைக் கவர்ந்ததாம். இவர் அதைக் கேட்பதோடு நில்லாமல் கற்றுக் கொள்ளவும் விரும்பினாராம். ஆனால் போதிய வசதி இல்லாமையால் தம் தாய்நாடாகிய இங்கிலாந்து திரும்பும் போது பிரபல வித்வான்களாலும் பாடகிகளாலும் பாடப்பட்ட சுமார் நூறு தமிழ், தெலுங்கு இசைத் தட்டுகளுடன் வந்து சேர்ந்தாராம். இது 1947-ம் ஆண்டில் நடந்தது.

இங்கிலாந்திற்குத் திரும்பியதும் அவர் லண்டன் ஓரியண்டல் ஸ்டடீஸ் காலேஜில் சேர்ந்து தெலுங்கு, ஸம்ஸ்க்ருதம், தமிழ் ஆகிய பாஷைகளைக் கற்கத் தொடங்கினாராம்.

மேலும் மேலும் இந்தியாவிலிருந்து புதிய இசைத் தட்டுக்களை வரவழைத்துக் கவனம் செலுத்திப் பாட்டுக்கள் கற்க ஆரம்பித்தாராம். சங்கீதத்தில் உள்ள ஆசையினால்தான் இவர் எங்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டார். நான் அவரைச் சங்கீதத்தைப் பற்றிப் பொதுவாகக் கேட்டபொழுது தமக்குத் தீக்ஷிதர் கிருதியில்தான் மிகவும் ஆசை என்று சொன்னார். அவர் வீட்டுக்கு எங்களைத் தேநீருக்கு அழைத்த பொழுது "ஜங்கார ஸ்ருதி" என்னும் இசைத்தட்டுக் கீர்த்தனம் எங்களை வரவேற்றது. தமிழ் நாட்டில் ஒரு தமிழர் வீட்டில் இருந்து அனுபவிக்கும் சூழ்நிலையை அவர் வீட்டில் கண்டோம்.

மேற்சொன்ன இளைஞர் சுருதி இல்லாமல் பாடிச் சாதகம் செய்து வந்தார். தம்முடைய காலேஜில் ஒரு மணி நேரம் பாட ஒப்புக்கொண்டுள்ளதாக என்னிடம் கூறினார். நான் என்னுடைய சுருதிப் பெட்டியைத் தருவதாகவும் அதனுடன் பாடிப் பழகும்படியும் சொன்னேன். அவரும் விடா முயற்சியுடன் என் சுருதிப் பெட்டியோடு ஒத்துழைத்துச் சாதகம் செய்தார்.

அவர் செய்த கச்சேரியைப் பற்றிச் சொல்கிறேன். முதலில் பாட்டைத் திடீரென்று தொடங்காமல் என்ன பாட்டு, என்ன ராகம், தாளம், யார் இயற்றியது என்றெல்லாம் சொல்லிவிட்டு அந்தப் பாட்டையும் ஒருதரம் சுத்தமாகப் படித்துக் காண்பித்து, அர்த்தங்களையும் சொல்லிவிட்டுப் பிறகுதான் பாடத் தொடங்கினார். 'நீதயராதா' என்ற வசந்த பைரவி கீர்த்தனத்துடன் தொடங்கிய கச்சேரி. ஸாமஜ வரகமன, ஓர ஜூபு ஜூ, ஸரஸ ஸாமதான, நாத தனுமனிசம் முதலிய கீர்த்தனங்கள் பாடினார். அவர் 'மானஸ குருகுஹ' என்ற தீக்ஷிதர் கிருதியை நிறுத்திச் சுத்தமாகப் பாடியதைக் கேட்டு நாங்கள் ஆச்சரியப்பட்டுப் போனோம். கடைசியாக அவர் வாதாபி கணபதிம் என்ற கிருதியைப் பாடினார். அவருடைய ஆங்கிலேய நண்பர் ஒருவர் வந்தனம் கூறிவிட்டு "விக்னேஸ்வரனைப் பற்றிய பாட்டை ஆரம்பத்தில் பாடி இருக்க வேணும்" என்று குறிப்பிட்டார். இந்தியப் பழக்க வழக்கங்கள் இவர்களுக்கு இவ்வளவு தெரிந்திருப்பது ஆச்சரியமல்லவா?

லண்டன்
24—5—49

லீலா கோபாலன்

# நடுத் தெருவில் நாலாயிரம் பேர்

ரஜனி

கொழும்பு, ஜூன் 12

வேதாளம் மீண்டும் முருங்கை மரமேறிக்கொண்டதாக விக்ரமாதித்தன் கதையிலே ஒரு உப கதையுண்டு. சென்ற இரண்டு மூன்று வாரங்களாக வேலையும் கூலியுமில்லாமல் திக்கற்றுத் தவிக்கும் சுமார் நாலாயிரம் இந்தியத் தொழிலாளருடைய நிலைமையும் இந்தக் கதைபோலாகிவிட்டது.

தோட்ட முதலாளிகளுக்கும் காங்கிரஸுக்கும் நடந்த ஒரு மகாநாட்டில் சில சமரச முடிவுகள் ஏற்பட்டன. காங்கிரஸ் பிரதிநிதிகள் ஒவ்வொரு ரப்பர் தோட்டத்துக்கும் சென்று அங்குள்ள நிலைமையை அனுசரித்து ஒவ்வொரு தோட்ட முதலாளியுடனும் சமரச முடிவுகளைச் செய்துகொள்ள வேண்டுமென்றும், அந்த முடிவுகளைத் தோட்ட முதலாளியார் சம்மேளனமும் சர்க்காரும் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும் மகாநாடு தீர்மானித்தது. இதைத் தழுவிக் காங்கிரஸ் பிரதிநிதிகள் தனிப்பட்ட முறையில் தோட்ட முதலாளிகளுடன் பேச முயன்றபொழுது, "தனித் தனியே பேச முடியாது; எங்கள் சம்மேளனத்துடன் பேசுங்கள்!" என்று தோட்டக்காரர்கள் பதிலளித்தனர். சம்மேளனத்தினிடம் போனால் "தனித் தனியாகத் தோட்டக்காரர்களைக் கண்டு பேசுங்கள்!" என்கிறார்கள். இவ்வாறு இழுத்தடித்து வருவதால் வேலை நீக்கம் செய்யப்பட்ட சுமார் 4000 தொழிலாளரும் கலங்கி நிற்கிறார்கள். தினசரி 8 மணி நேர வேலை யில்லாவிட்டாலும் 6 மணி நேர வேலையும் அதற்குரிய சம்பளமுமாவது கொடுக்கச் செய்து எல்லாத் தொழிலாளரையும் திரும்ப வேலையில் வைத்துவிடக் காங்கிரஸ் பெருமுயற்சி செய்து வருகிறது.

## அரசியல் போராட்ட ஜுரம்

கொஞ்ச காலமாக வட இலங்கையில் இடைவிடாமல் அரசியல் போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. தமிழர்களுக்குச் சுய நிர்ணய உரிமையளித்து இலங்கையிலே சமஷ்டி அரசியல் ஏற்படுத்த வேண்டுமென்று திரு செல்வநாயகம் கோஷ்டியார் யாழ்ப்பாண தீபகற்பத்தின் ஒவ்வொரு மூலைக்கும் சென்று தீவிரமாகப் பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார்கள். சமஷ்டி அரசியல் தமிழர் சமூகத்தையே அழித்துவிடுமென்றும் வாழ்விலும் தாழ்விலும் சிங்களவருடன் சேர்ந்து ஒத்துழைக்க வேண்டுமென்றும் மந்திரி ஸ்ரீ பொன்னம்பலம் கோஷ்டியார் கிராமத்துக்குக் கிராமம் சென்று பதிலளிக்கிறார்கள். இவ்விதம் கட்சிப் பிரதிகட்சிக் கூட்டங்கள் ஒவ்வொரு வாரமும் நடக்கின்றன. இந்த அரசியல் போராட்ட ஜுரம் இப்பொழுது உச்ச நிலையை அடைந்திருக்கிறது.

## திடீர் மாறுதல்களின் வினை

செலாவணி இலாகா அதிகாரிகள் செய்யும் ஒவ்வொரு காரியமும் லக்ஷக்கணக்கான இந்தியர்களுக்கு மிகுந்த கஷ்டத்தைக் கொடுத்து வருகிறது. இந்தியாவுக்குக் குடும்ப சம்ரக்ஷணத்துக்காகப் பணம் அனுப்ப விரும்புவோரெல்லாம் 29-ம் நம்பர் பாரத்தில் இந்திய ஜில்லா நீதிபதிகளின் கை



"கிட்டு, நீ பிறந்த தேதி எது?"

"மோதிலால்நேரு காலமான தினத்தில் நான் பிறந்தேனுங், ஸார்!"

"இரண்டு சம்பவங்களும் ரொம்ப வருத்தப்பட வேண்டிய விஷயங்கள்தான்!"

"இந்தியா தேசம் சுதந்திரம் அடைந்தது உண்மையானால் எதற்காகத் தேசம் இரண்டாகப் பிளக்கப்பட வேண்டும்? சுதந்திர இந்தியா சுதந்திரமாகச் செய்த காரியமா இது?"

"இந்தியா இரண்டாகப் பிரிந்ததினால் இப்போது என்ன மோசம் முழுகிவிட்டது? இரண்டு பிரிவுகளும் தனித்தனியாகச் சுதந்திரம் அநுபவித்துப் போகட்டுமே! மேலும், இந்தியா பிளந்தது என்றால் கோடரியைப்போட்டுப் பிளந்து விட்டார்களா? அல்லது பீகார் பூகம்பத்தைப்போல் பூகம்பம் வந்து பிளந்து விட்டதா? அப்படி ஒன்றும் இல்லையே? பாரதபூமி இன்னும் ஒரே பூமியாகத்தானே இருக்கிறது?" என்றான் சூரியா.

"அதைப் பற்றித்தான் சந்தேகப்படுகிறேன். தாயின் இரண்டு கைகளையும் வெட்டித் துண்டித்துத் தனியாகப் போட்டு விட்டது மாதிரி எனக்குத் தோன்றுகிறது!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. ஆதிகாலத்திலிருந்து நம் இந்தியா தேசம் பல தனித்தனி ராஜ்யங்களாகப் பிளவுபட்டே யிருந்திருக்கிறது."

"அந்தப் பிளவுகள் அரசியல் காரணம் பற்றியவை. இது மதத்தின் பெயரால் ஏற்பட்ட பிரிவினை அல்லவா?"

"அதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. மதத்திற்காக ஏற்பட்ட பிரிவினை என்று எப்படிச் சொல்லலாம்? இந்தியாவில் முஸ்லிம்களும் பாகிஸ்தானில் ஹிந்துக்களும் வாழ்ந்திருக்கத்தானே போகிறார்கள்?"

"அதுதான் சந்தேகம், சூரியா! 'டான்' பத்திரிகையை இன்று பார்க்கவில்லையா? அமிருதசரஸ் கடை வீதி தீப்பிடித்து எரிகிறதாமே!"

"'டான்' பத்திரிகையில் வந்தது வெறும் புளுகாயிருக்கும். அப்படியே இருந்தாலும் இருக்கட்டும். தேசத்துக்காக நாம் கவலைப்பட்டதெல்லாம் போதும்! எது எப்படியாவது போகட்டும். இப்போது நம் கலியாணத்தைப் பற்றிச் சொல்லுங்கள்!"

"நமக்குள் கலியாணம் எப்படி சாத்தியம்? மத வித்தியாசம் ஒன்று இருக்கிறதே! நீங்கள் ஹிந்து; நான் முஸ்லிம் பெண் ஆயிற்றே!"

"இது என்ன புதிய தடை புறப்படுகிறது! நான் ஹிந்துவுமல்ல; நீங்கள் முஸ்லிமும் அல்ல. நமக்கு மதம் என்பதே கிடையாது. மனித தர்மந்தான் நம்முடைய மதம். இதைப் பற்றிப் பல தடவை பேசி முடிவு கட்டியிருக்கிறோம்! மேலும் நீங்கள் முஸ்லிம் மதத்தினர் என்பதாக நான் என்றைக்கும் நம்பவே யில்லை. சில சமயம் முஸ்லிம் ஸ்திரீயைப் போல் உடை தரித்திருக்கிறீர்கள். அதனால் நீங்கள் முஸ்லிம் ஆகிவிட முடியாது."

"ஒருவருடைய தாயும் தகப்பனும் முஸ்லிமா யிருந்தால்......?"

"ஒருவருடைய தாயும் தகப்பனும் முஸ்லிமாயிருந்தால் அதைப்பற்றி ரஜனிபூர் ராஜகுமாரிக்கு என்ன கவலை?" என்றான் சூரியா.

தாரிணி கலகல வென்று சிரித்தாள்.

"முஸ்லிம் ஸ்திரீயைப் போன்ற வேஷம் சில காரியங்களுக்கு ரொம்பவும் சௌகரியமாயிருக்கிறது. இல்லாவிட்டால் ரஜனிபூர் அரண்மனையை விட்டு நான் வெளிக் கிளம்பியிருக்கவே முடியாது. ரஜனிபூர் ராஜாவும் அவருடைய தாயாரும் என்னை எப்படியாவது அங்கே இருக்கப் பண்ண வேண்டும் என்று பார்த்தார்கள். பாதி ராஜ்யம் கேட்டால் கூடக் கொடுத்திருப்பார்கள். ஆனால் நான் முஸ்லிம் ஸ்திரீ என்பதை அவர்களால் சகிக்கமுடியவில்லை! அதனாலே நான் அங்கிருந்து புறப்படச் சம்மதித்தார்கள். இப்போதுகூட நான் உண்மையில் முஸ்லிம் மதத்தைச் சேர்ந்துவிடவில்லை யென்று போய்ச் சொன்னால் போதும்; ரஜனிபூர் அரண்மனைக்கு நான்தான் ராணி!"

"கூடவே கூடாது; அடியேனுடைய இதய ராஜ்யத்துக்குத் தாங்கள் ராணியா யிருந்தால் போதும். நமக்குக் கலியாணம் ஆனவுடனே......"

"சூரியா! உங்களுக்குக் கூச்சம் என்பதே கிடையாதா? ஆயிரம் பதினாயிரம் ஜனங்களுக்கு மத்தியிலேதானா காதலையும் கலியாணத்தையும் பற்றிப் பேசுவது? கொஞ்சம் தனி இடமாகப் பார்த்து உட்கார்ந்துகொண்டு பேசக் கூடாதா?" என்றாள் தாரிணி.

தரித்துக் கொண்டும் வெளிச்சம் மேலே படாமல் ஒளிந்து மறைந்துகொண்டும் எத்தனையோ தடவை நடந்ததுண்டு. ஆனால் இப்போது அப்படிப்பட்ட பயமுமில்லை; தயக்கமுமில்லை; ஒளிவு மறைவுக்கு அவசியமும் இல்லை. சூரியா கதர்க் குல்லா அணிந்து கொண்டும் தாரிணி ஆரஞ்சு வர்ணப் புடவை அணிந்து கொண்டும் பகிரங்கமாகக் கைகோத்துக் கொண்டும் பேசிக் கொண்டும் நடந்தார்கள். பதினாயிரக் கணக்கான ஜனக் கூட்டத்துக்கு மத்தியில் நடந்தபோதிலும் அவர்களுக்குத் தங்களைத் தவிர வேறு யாரும் அக்கம் பக்கத்தில் இருப்பதாகவே ஞாபகமில்லை. அவ்வளவு மெய்மறந்த உற்சாகத்துடன் அவர்கள் உல்லாசமாகப் பேசிக் கொண்டு சென்றார்கள்.

"இந்தியாவுக்குச் சுதந்திரம் வந்து கொண்டாட்டமும் நடத்துவதை நம்முடைய ஜீவிய காலத்தில் பார்ப்பதற்குக் கொடுத்து வைத்திருந்ததே! இதைக் காட்டிலும் நமக்குக் கிடைக்கக்கூடிய அதிர்ஷ்டம் வேறு என்ன இருக்கிறது?" என்றாள் தாரிணி.

"நம்மைப் பொறுத்த வரைக்கும் இதைவிட மேலான அதிர்ஷ்டம் ஒன்று இருக்கத்தான் இருக்கிறது. அது நம்முடைய கலியாண வைபவந்தான்!" என்று சொன்னான் சூரியா.

"இன்று டில்லி நகரின் அலங்கார தீபங்கள் வானத்து நட்சத்திரங்களுடன் போட்டி போடுகின்றன என்று சொன்னால் பொருத்தமாகவே இருக்கும். வானத்து நட்சத்திரங்களை எண்ணினாலும் எண்ணலாம். இந்தத் தீபங்களை எண்ண முடியாதுபோலிருக்கிறதே?" என்றாள் தாரிணி.

"நான் ஒன்று சொன்னால் நீங்கள் வேறொன்று சொல்கிறீர்களே? நம்முடைய வரப்போகும் கலியாணத்தைப் பற்றி நான் குறிப்பிட்டேன். இந்தியா சுதந்திரம் அடைந்ததும் நாம் திருமணம் செய்துகொள்கிறது என்று பேசி முடிவு செய்திருந்தோமல்லவா? அதைப்பற்றி இப்போது உங்கள் அபிப்பிராயம் என்ன? தயவுசெய்து சொல்லவேணும்!" என்றான் சூரியா.

"இதே வெள்ளி வீதியில் முன்னே நாம் எத்தனை தடவை போலீஸுக்குப் பயந்து தயங்கிப் பதுங்கி நடந்திருக்கிறோம்? அதையெல்லாம் நினைத்தால் வேடிக்கையாக இருக்கிறது. அப்போது நாம் பேசிக்கொண்டதை நினைத்தால் சிரிப்பாக வருகிறது. காந்திஜியினாலும் மற்ற மிதவாத காங்கிரஸ் தலைவர்களினாலும் இந்தியாவுக்குச் சுதந்திரம் வரப்போவதில்லை.—அவர்களையெல்லாம் தலைமைப் பதவியிலிருந்து தூக்கிவிட்டுப் பொதுஜனப் புரட்சி இயக்கத்தை நடத்தவேண்டும். — சோஷலிஸ்ட் கட்சியினால்தான் அந்த மகா இயக்கத்தை நடத்த முடியும்.— என்றெல்லாம் பேசிக் கொண்டோமல்லவா? கடைசியாகப் பார்த்தால், அந்த மகாத்மா கிழவரும் மிதவாதக் காங்கிரஸ் தலைவர்களுமே இந்தியாவின் சுதந்திரத்தை நிலைநாட்டி விட்டார்களே?" என்றாள் தாரிணி.

"அதைப்பற்றி இப்போது என்ன விவாதம்? எந்தச் சட்டியில் சுட்டாலும் பணியாரம் வேகவேண்டியது தானே முக்கியம்? பணியாரம் வெந்து விட்டது! சுதந்திரம் வந்துவிட்டது! நாம் கலியாணம் செய்து கொள்வதற்கிருந்த ஒரே தடையும் நீங்கி விட்டது!" என்றான் சூரியா.

"இந்தியா உண்மையில் சுதந்திரம் அடைந்து விட்டதென்று சொல்கிறீர்கள்? எனக்குச் சந்தேகமாயிருக்கிறது!" என்றாள் தாரிணி.

"அதிலேகூடச் சந்தேகம் வந்து விட்டதா? 'காந்திஜியின் ஆத்மசக்தி வென்று விட்டது!' 'இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டது!' 'பண்டிட் மவுண்ட்பேட்டனுக்கு ஜே!' என்று தேசமெல்லாம் ஒரே கோஷமாயிருக்கிறதே! அதில் சந்தேகம் என்ன இருக்க முடியும்! ஆகையால் நம் முன்னால் உள்ள அடுத்த முக்கியமான புரோகிராம் நம்முடைய திருமணந்தான்!" என்றான் சூரியா.

"சூரியா! ஒரே பல்லவியைத் திருப்பித் திருப்பிப் பாடுகிறீர்களே?"

"வேறு என்ன பல்லவியை இன்று பாடுவது? 'ஜனகணமன' 'வந்தேமாதரம்' கீதங்களைத்தான் ரேடியோவில் விடாமல் கொலை செய்து கொண்டிருக்கிறார்களே! ஆகையால், நம்முடைய கலியாணத் தேதியை இந்த நல்ல நாளில் நிச்சயம் செய்யலாம்."

"எங்களை ஒன்று சேர்த்து வைப்பதற்காக இவ்வளவு பயங்கரமான கலகம் நடக்க வேண்டுமா? அதற்காகப் பத்தாயிரம் பேர் செத்துப் போக வேண்டுமா?" என்றாள் சீதா.

"இன்னும் கொஞ்ச நாள் போனால் இந்தக் கலகத்தை ஆரம்பித்ததே நான்தான் என்று சொன்னாலும் சொல்லுவீர்கள் போலிருக்கிறது!" என்று சௌந்தரராகவன் தமாஷ் செய்தான்.

"கலகத்தை நீங்கள் ஆரம்பித்து வைக்கவில்லை; ஸ்ரீமதி சீதா தேவிதான் ஆரம்பித்து வைத்தார்! அவர் ஹௌரா ரயில்வே ஸ்டேஷனில் வந்து இறங்கிய அன்றைக்குத்தானே கலகம் ஆரம்பித்தது?" என்றான் அமரநாத்.

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# அடுத்த ஆண்டு

நமது கதையின் முடிவு நெருங்கி வரும் சமயத்தில் நாமும் கொஞ்சம் அவசரமாகப் போகவேண்டியிருக்கிறது. காலெண்டரில் ஏறக்குறைய ஒரு வருஷத்தை அப்படியே புரட்டித் தள்ளி விட்டு, அடுத்த 1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ம் தேதிக்கு வருவோம். அன்றைய தினம் சுதந்திர பாரத தேசத்தின் ஜகஜ்ஜோதியான தலை நகரமாய் விளங்கிய டில்லிமா நகரத்துக்குச் செல்வோம்.

1942-ம் வருஷத்திலிருந்து இந்தியா தேசத்துக்கு ஆகஸ்டு மாதம் முக்கியமானதாயிற்று. அந்த வருஷம் ஆகஸ்டு மாதத்திலேதான் இந்தியாவின் சுதந்திரப் போராட்டம் அதன் உச்ச நிலையை அடைந்தது. பிற்பாடு, 1946-ம் வருஷம் ஆகஸ்டில் முஸ்லிம் லீக் கொண்டாட விரும்பிய நேர் நடவடிக்கை (டைரக்ட் ஆக்ஷன்) தினம் இந்தியத் தாயின் திருமேனியைப் புண்படுத்தி, அதன் மூலம் ஆகஸ்டு மாதத்துக்குப் பிரசித்தி அளித்தது.

1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதமோ இந்திய சரித்திரத்திலேயே இணையற்ற முக்கியம் பெற்றது. ஆயிரம் வருஷத்துக்கு மேல் அடிமையாக வாழ்ந்திருந்த பாரத தேசம் அந்த வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி சுதந்திர தேசம் ஆயிற்று. நாற்பது கோடி இந்திய மக்கள் விடுதலைப் பேறு அடைந்தார்கள். அதே சமயத்தில் அவர்களில் முப்பத்திநாலு கோடிப் பேர் இந்திய யூனியன் என்னும் தனிச் சுதந்திர நாட்டினராகவும், பாக்கி ஆறு கோடிப் பேர் சுதந்திர பாகிஸ்தான் பிரஜைகளாகவும் பிரிந்தார்கள்.

இந்தியா சுதந்திரம் அடைந்த வைபவத்தைத் தேசமெங்கும் மகத்தான உற்சாகத்துடனே கொண்டாடினார்கள். இந்திய சுதந்திர அரசாங்கத்தின் தலைநகரமான டில்லியிலே கொண்டாடினார்கள் என்று சொல்லவும் வேண்டுமா? அன்று காலையிலிருந்து டில்லியும் புது டில்லியும் ஒரே கோலாகலமாயிருந்தன.

சுதந்திரத் திருநாளன்று மாலை டில்லிமா நகரம் அளித்த அலங்காரக் காட்சியைப் போல் அதற்கு முன்னால் அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் காலத்திலே கூடப் பார்த்திருக்க முடியாது. அந்த நாளில் மின்சார விளக்கு ஏது? அல்லது இவ்வளவு பொதுஜன உற்சாகத்துக்குத்தான் இடம் ஏது?

முக்கியமாக, சரித்திரப் பிரசித்தமான 'சாந்த்னி சவுக்' என்னும் வெள்ளி வீதியும் அந்த வீதியிலுள்ள மணிக்கூண்டும் டவுன் ஹாலும் இன்னும் சுற்றுப் புறங்களும் அற்புதமான தீபாலங்காரங்களினால் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்துக் கண்கொள்ளாக் காட்சியளித்தன!

சூரியாவும் தாரிணியும் அன்று சாயங்காலம் டில்லியின் குதூகலக் கொண்டாட்டங்களையும் தீபாலங்காரங்களையும் பார்த்துக் கொண்டு வெள்ளி வீதியில் நடந்துகொண்டிருந்தார்கள். *டில்லி நகரம் தீபங்களினால் ஜொலித்ததுபோல் அவ்விருவருடைய முகங்களும் பிரகாசமாயிருந்தன.

இதே வெள்ளி வீதியில் சூரியாவும் தாரிணியும் போலீஸாரின் கையில் அகப்படாமல் இருப்பதற்காக வேஷந்

* இந்தக் காட்சியை நமது சித்திரக்காரர் 'சந்திர' கற்பனைக் கண்ணால் கண்டு தீட்டிய சித்திரத்தை இந்தக் "கல்கி" இதழின் அட்டையில் காணலாம்.

வேலை செய்யும் கம்பெனிக்காரர்கள் 'பஞ்சாப்புக்குப் போகிறீயா? அங்கே மாகாண ஆர்கனைசர் வேலை தருகிறோம்' என்று கேட்டார்கள். நான் அதற்கு உடனே பதில் சொல்லவில்லை. பஞ்சாப் டில்லிக்குப் பக்கத்தில் இருப்பதால் அங்கே போக எனக்கு அச்சமயம் விருப்பமாக இல்லை. ஆனால் இங்கே ஆகஸ்டு 16லே ஆரம்பித்து நடந்த சம்பவங்களைப் பார்த்த பிறகு 'வசித்தால் பஞ்சாப்பிலேதான் வசிக்க வேண்டும்' என்று முடிவு செய்து விட்டேன். உலகத்தில் எத்தனையோ மகான்கள் எவ்வளவோ மதங்களை ஸ்தாபித்திருக்கிறார்கள். அவர்களுக்குள்ளே சீக்கிய மதத்தை ஸ்தாபித்த குரு நானக் என்பவரையே நான் மிகப் பெரிய மகான் என்று கருதுகிறேன். அவர்தான் ஒரு மதத்தை ஸ்தாபித்ததோடு ஒரு வீர சமூகத்தையும் படைத்தார். உலகத்திலே வீரர்கள் என்று சொன்னால் சீக்கியர்களைத்தான் சொல்ல வேண்டும். கேள், சீதா! இந்த ஊரில் கலகம் ஆரம்பித்து முதல் இரண்டு நாள் நான் என்ன நினைத்தேன், தெரியுமா? 'கல்கத்தாவிலும் வங்காளத்திலும் ஹிந்து என்று சொல்லிக்கொள்ள ஒரு ஆணோ, பெண்ணோ, குழந்தையோ இல்லாமற் போய்விடும் என்று நினைத்தேன். மூன்றாம் நாள் என்ன ஆயிற்று தெரியுமா? கிளம்பினார்கள் சீக்கியர்கள்! இந்தனைக்கும் அவர்களில் பெரும்பாலோர் டாக்ஸி கார் ஓட்டிய டிரைவர்கள். அவர்கள் கையில் கிர்பாணை எடுத்துக் கொண்டு புறப்பட்ட பிறகுதான் கல்கத்தாவிலும் வீர புருஷர்கள் இருக்கிறார்கள் என்று ஏற்பட்டது! கல்கத்தாவில் உள்ள முப்பது லட்சம் ஹிந்துக்களும் உயிர் பிழைத்தார்கள்! இப்படிப்பட்ட வீரர்களின் தாய் நாடு பஞ்சாப் தேசம். அத்தகைய நாட்டில் போய் இருப்பதே புண்ணியம் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒரு வேளை என்னுடைய மனோ நிலையை உன்னால் புரிந்து கொள்ள முடியாமலிருக்கலாம்!" என்று தயங்கிச் சொன்னான் ராகவன்.

உண்மையில் ராகவனுடைய மனோ நிலையைச் சீதாவினால் புரிந்துகொள்ள முடியவில்லைதான். பஞ்சாப்பியர்களைப் பற்றி அவளுடைய நினைவுகள் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. டில்லியில் அவள் பஞ்சாப்பியருடன் பழகியிருக்கிறாள். சுத்த முரடர்கள்; நாகரிகமில்லாதவர்கள். ஆனால் வங்காளிகளின் நாகரிகம் என்ன, படிப்பு என்ன, மரியாதை என்ன? கல்கத்தா சிறைச்சாலையில் வங்காளிகளுடன் அவளுக்கு ஏற்பட்ட பழக்கம் அவர்களைப் பற்றி மிக நல்ல அபிப்பிராயத்தை அளித்திருந்தது. சித்ரா—அமரநாத் ஆகியவர்களின் அபிப்பிராயமும் அதற்கு ஒத்தேயிருந்தது.

பழைய காலமாயிருந்தால் ராகவனுடைய ஒவ்வொரு வார்த்தையையும் மறுத்து ஒன்பது வார்த்தை சீதா சொல்லியிருப்பாள். ஆனால் இப்போது அந்த இயல்பு அவளிடம் மாறிப் போயிருந்தது. ராகவனுடைய உடல் நிலையும் அவனுடன் மாறுபட்டுப் பேசக்கூடாது என்று வற்புறுத்தியது.

ஆகையால் ராகவன் சொன்னதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சீதா கூறினாள்:— "என்னத்திற்காக இவ்வளவு தூரம் வளைத்து வளைத்துப் பேசுகிறீர்கள்? நான்தான் முன்னமேயே சொல்லி விட்டேனே? எனக்குக் காரணம் ஒன்றுமே தெரிய வேண்டியதில்லை. உங்களுக்குப் பிடித்த இடம் எதுவோ அதுதான் எனக்கும் பிடித்த இடம். அந்த நாளிலும் அப்படித்தான் நினைத்திருந்தேன். இப்போதும் அவ்விதமே எண்ணியிருக்கிறேன். நடுவில் தலைவிதியின் காரணமாக அங்கு மிங்கும் சுற்றி அலைய நேர்ந்தது. அதெல்லாம் பழைய கதை. இனி மேல் என்ன நேர்ந்தாலும் உங்களை நான் பிரியப் போவதில்லை. நீங்கள் எங்கே இருக்கிறீர்களோ, அதுதான் என்னுடைய சொர்க்கம்!..."

இந்தக் கடைசி வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு சித்ராவும் அமரநாத்தும் உள்ளே வந்தார்கள்.

"இப்போதுதான் எனக்கு உண்மையில் சந்தோஷமாக இருக்கிறது. இந்த ஊரில் கலகம் வந்தாலும் வந்தது, உங்கள் இரண்டு பேரையும் ஒன்று சேர்த்து வைத்ததே! எப்படிப்பட்ட கெட்டதிலும் ஒரு நல்லது இருக்கும் என்று இதனாலேதான் நம் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்!" என்றாள் சித்ரா.

எங்கே போனாலும் அவளையும் கூட அழைத்துக் கொண்டு போய்விடு!'' என்றான் ராகவன்.

"வஸந்தியையும் விட்டுப் போக வில்லை; உங்களையும் விட்டுப் போக உத்தேசமில்லை'' என்றாள் சீதா.

"என்னைப்பற்றிக் கவலை என்னத் திற்கு?'' என்றான் ராகவன்.

சீதா பதில் சொல்லாமல் ராகவ னுடைய முகத்தைத் துயரம் ததும்பிய கண்களினால் ஏறிட்டுப் பார்த்தாள்.

மற்றொரு நாள் ராகவன் "சீதா! உனக்கு இந்தக் கல்கத்தா நகரம் ரொம்பப் பிடித்திருக்கிறது என்று சித்ரா சொன்னாள். அது வாஸ்தவந் தானே?'' என்று கேட்டான்.

சீதா சிறிது முக மலர்ச்சியுடன் "ஆமாம்; கல்கத்தா எனக்கு ரொம் பவும் பிடித்திருக்கிறது. இங்கேயே நாம் இருந்து விடுவதில் எனக்குப் பூரண சம்மதந்தான்!'' என்றாள்.

"ரொம்ப சந்தோஷம். நீயும் வஸந் தியும் இங்கேயே இருந்துவிடலாம். உங்களுக்கு நல்ல துணையும் இருக் கிறது. சித்ராவையும் அவளுடைய கணவனையும்போல் நல்லவர்கள் எங் கும் கிடைக்க மாட்டார்கள்!'' என்று சொன்னான் ராகவன்.

சீதா சந்தேகக் குரலில் "நானும் வஸந்தியும் மட்டும் இங்கே இருக் கிறதா? நீங்கள்?'' என்றாள்.

"எனக்கு இந்த ஊர் பிடிக்கவில்லை. அதிலும் இங்கே நடந்த கோர கிருத் யங்களை யெல்லாம் பார்த்த பிறகு அடியோடு பிடிக்காமற் போய்விட்டது. இங்கே இருந்தேனானால் என்னுடைய மூளை சரியாகவே ஆகாது. உடம்பு கொஞ்சம் சரியானதும் இங்கிருந்து கிளம்பிப் போய்விட வேண்டும் என்று உத்தேசித்திருக்கிறேன்.''

"தயவுசெய்து இப்படிப் பிரித்துப் பேச வேண்டாம். உங்களுக்கு இந்த ஊர் பிடிக்கவில்லை என்றால், எனக்கும் பிடிக்கவில்லைதான். உங்களுக்கு எந்த ஊர் பிடிக்கிறதோ அந்த ஊர்தான் எனக்கும் பிடிக்கும். நீங்கள் எங்கே போகிறதாக உத்தேசம்?''

"நான் பஞ்சாப் மாகாணத்துக்குப் போகிறதாக இருக்கிறேன்.''

"நீங்கள் பஞ்சாப்புக்குப் போனால் நானும் பஞ்சாப்புக்கு வருகிறேன்.''

"ஒருவேளை பஞ்சாப் தேசம் உனக் குப் பிடிக்காது!'' என்றான் ராகவன்.

"பிடிக்காமல் என்ன? டில்லியில் நாம் இருக்கும்போதே பஞ்சாப்புக்குப் போய்ப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆசையாயிருந்தது. அமிருத சரஸில் சீக்கியர்களின் அற்புதமான பொற்கோயில் இருக்கிறதாம். லாகூ ரில் ஷாலிமார் தோட்டம் இருக்கிற தாம். இந்தியாவிலேயே பெரிய மசூதி அங்கே இருக்கிறதாம். அதை யெல் லாம் பார்க்கலாம் அல்லவா?''

ராகவனுடைய முகம் சுருங்கியது. "சீதா! உன்னை ஒன்று கேட்டுக் கொள்கிறேன். வேறு எதைப்பற்றி வேணுமானாலும் நீ பேசு. ஆனால் மசூதி என்கிற பேச்சை மட்டும் நான் இருக்கும்போது எடுக்காதே! என் உடம்பு பதறுகிறது!'' என்றான்.

சீதாவுக்குப் பழைய நினைவுகள் எல் லாம் குமுறிக் கொண்டு வந்தன. தாஜ்மகாலைப் பார்க்க வேண்டும், அக்பர் சமாதியைப் பார்க்க வேண்டும் என்பது போன்ற ஆசைகளினால் தனக்கு நேர்ந்த இன்னல்களை யெல் லாம் நினைத்துக் கொண்டாள்.

"ஏதோ யோசியாமல் சொல்லிவிட் டேன். எனக்கு இனிமேல் ஒரு இடத் தையும் ஒரு பொருளையும் பார்க்க வேண்டாம். உங்களையும் வஸந்தியை யும் பார்த்துக் கொண்டேயிருந்தால் அதுவே போதும்!'' என்றாள்.

சீதாவின் இந்த வார்த்தைகள் சௌந்தர ராகவனுக்குச் சொல்ல முடியாத இன்பத்தை—அவருகாலமாக அவன் அநுபவித்தறியாத — அபூர்வ மகிழ்ச்சியை அளித்தன.

இன்னொரு நாள் ராகவன், "சீதா! எதற்காக நான் இங்கிருந்து பஞ்சாப் புக்குப் போகத் தீர்மானித்தேன் தெரியுமா?'' என்று கேட்டான்.

"தெரியாது; எனக்குக் காரணம் தெரிய வேண்டியது மில்லை! பஞ்சாப் புக்கு நீங்கள் போக விரும்புவது ஒன்றே போதும்!'' என்றாள் சீதா.

"இல்லை; உனக்குக் காரணம் தெரிந்திருக்க வேண்டும். சீமையி லிருந்து திரும்பி வந்தவுடனேயே நான்







## இருபத்துநாலாம் அத்தியாயம்

## "என் சொர்க்கம்!"

சீதாவின் வரவினால் ராகவனுடைய சுரம் குணம் அடைந்து வந்ததாகத் தோன்றியது. சுரத்தின் வேகத்தில் அவன் எவ்வளவு முரட்டுத்தனமாக நடந்து கொண்டாலும் எப்படியெல்லாம் சத்தம் போட்டுப் பிதற்றினாலும் சீதாவின் கைபட்டவுடனேயே அவன் உடம்பும் மனமும் சிறிது அமைதி அடைந்தது. இதைக் கவனித்த சித்ரா "அடியே! இதற்கு முன்னால் நீ என்னவெல்லாம் தவறாக நடந்திருந்தாலும் இப்போது நல்ல சமயத்தில் வந்து உன் புருஷனுடைய உயிரைக் காப்பாற்றினாய். நீ செய்த பாவத்துக்கெல்லாம் பிராயச்சித்தம் செய்துகொண்டு விட்டாய்!" என்று சொன்னாள். இதைக் கேட்ட சீதாவின் கண்களில் நீர் ததும்பிற்று.

சீதா வந்த புதிதில் ராகவனுடைய கண்கள் அவளைப் பார்த்தாலும் அவள் யார் என்று அவன் தெரிந்து கொண்டதற்கு அடையாளம் காணப்படவில்லை. ஆனால் இரண்டு மூன்று நாளைக்குப் பிறகு ஒரு தடவை சீதாவைப் பார்த்தபோது ராகவனுடைய கண்களில் வியப்பும் முகத்தில் மலர்ச்சியும் தோன்றின. பிறகு கொஞ்சம் கொஞ்சமாகச் சீதாவுடன் அவன் பேச ஆரம்பித்தான். அவள் கல்கத்தாவுக்கு என்றைக்கு வந்தாள், எங்கே தங்கியிருந்தாள் என்பதைப் பற்றியெல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டான். ஹாவ்ராவில் அவளுக்கு அடைக்கலம் கொடுத்து ஆதரித்தவர்களைப் பற்றி ரொம்பவும் சிலாஇத்துப் பேசினான்.

குழந்தை வஸந்தி கேட்ட கேள்வியையே ஒரு நாள் சௌந்தர ராகவனும் சீதாவிடம் கேட்டான். "உன் பிரயாணமெல்லாம் முடிந்து விட்டதல்லவா? இனிமேல் எங்கேயும் போக வேண்டாம் அல்லவா?" என்றான்.

"முன்னேயும் எனக்குப் போக வேண்டியிருக்கவில்லை. இனிமேலும் எனக்கு எங்கும் போக வேண்டியிராது!" என்றாள் சீதா.

"அப்படிப் போவதாயிருந்தாலும் வஸந்தியை விட்டுவிட்டுப் போகாதே!

லால் பாண்டியாவுக்கும் அவருடைய தோழர்களுக்கும் சொற்ப கால சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. ஸ்ரீ மோகன் லால் பாண்டியாவுக்கு 'வெங்காயத் திருடன்' என்ற சிறப்புப் பட்டம் பொது ஜனங்களால் அளிக்கப்பட்டது. 'வெங்காயத் திருடனுக்கு ஜே!' என்ற கோஷம் வானத்தை அளாவியது.

இந்தச்சம்பவத்தினால் ஜனங்களின் உற்சாகம் புத்துயிர் பெற்றது. ஆனால் அதிக காலம் அது நீடித்திருக்கவில்லை. கஷ்டப்பட்டுத் தேடிய உடைமைகள் பறிபோவதைப் பார்த்துக் கொண்டிருக்க ஜனங்களால் முடியவில்லை. பெரும்பாலோர் களைத்துப் போனார்கள். உறுதியாக நின்ற ஒரு சிலரை மட்டும் அடியோடு அழிந்து போகும்படி விட்டுவிடுவதா என்ற கவலை காந்திஜியின் மனதில் தோன்றியது. இவ்வளவு மகத்தான தியாகங்களைச் செய்ய வேண்டியதாயிருக்கும் சத்தியாக்கிரஹப் போருக்கு மக்களை முன்னதாகவே தக்கபடி தயார் செய்யவில்லை என்ற எண்ணமும் உண்டாயிற்று.

இந்த நிலைமையில் நதியாத் தாலூகா தாசில்தார், "பணக்காரர்கள் வரியைச் செலுத்திவிட்டால் ஏழைக் குடியானவர்களிடம் வரி வசூலிப்பது நிறுத்தி வைக்கப்படும்" என்று மகாத்மாவுக்குச் செய்தி சொல்லி அனுப்பினார். தாசில்தார் அவருடைய தாலூகாவுக்கு மட்டும் பொறுப்பானவர். ஜில்லா முழுவதிலும் நடக்கும் இயக்கத்தை ஒரு தாலூகாவில் மட்டும் எப்படி நிறுத்த முடியும்?

ஆகையால் காந்திஜி கெயிரா ஜில்லா கலெக்டருக்குக் கடிதம் எழுதி, நதியாத் தாலூகா தாசில்தார் சொன்னது கெயிரா ஜில்லா முழுவதற்கும் பொருந்துமா என்று கேட்டிருந்தார்.

ஜில்லா கலெக்டர் எழுதிய பதிலில் அது ஜில்லா முழுவதற்கும் பொருந்தும் விஷயம் என்றும், 'பணக்காரர்கள் வரி செலுத்தி விட்டால் ஏழைகளிடம் வரி வசூலை நிறுத்தி வைக்கும்படி' ஏற்கெனவே தாம் உத்தரவு போட்டு விட்டதாகவும் தெரிவித்திருந்தார்.

இதை அறிந்ததும் ஜனங்கள் வெற்றிக் கொண்டாட்டம் நடத்தத் தொடங்கினார்கள். அவர்கள் கையெழுத்திட்ட உறுதி மொழிப் பத்திரத்தில் அவர்கள் கேட்டிருந்ததும் இதுதான் அல்லவா? ஆகையால் தங்களுடைய இயக்கம் பூரண வெற்றி அடைந்து விட்டதாக அவர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள்.

ஆனால் காந்தி மகானுக்கு இந்தக் கெயிரா போராட்டத்தின் முடிவு அவ்வளவாகத் திருப்தி அளிக்கவில்லை. சத்தியாக்கிரஹ இயக்கத்தின் முடிவில் எதிரிகளுடைய மனம் மாறி யிருக்கவேண்டும் என்றும் சமரசமான பேச்சு வார்த்தையுடன் முடியவேண்டும் என்றும் காந்திஜி கருதினார். ஆனால் இந்த இயக்கத்தினால் அதிகாரிகளுடைய மனம் கொஞ்சங்கூட மாறியதாகத் தெரியவில்லை. ஜனங்களும் சத்தியாக்கிரஹ இயக்கத்தின் தத்துவத்தை நன்கு உணர்ந்து கொண்டதாகத் தோன்றவில்லை. ஆகையால் கெயிரா சத்தியாக்கிரஹம் பூரண வெற்றி அளித்ததாக மகாத்மா காந்தி கருதவில்லை.

ஆயினும் அந்த இயக்கத்தின் பின்தைய பலன்கள் மகத்தானவையா யிருந்தன. அதன் பயனாகவே குஜராத் மாகாணத்து மக்கள் விழிப்பு அடைந்து எழுந்தனர். காந்தி மகாத்மாவின் பெருமையை உணர்ந்து அவரைத் தங்கள் மாபெருந் தலைவராக ஏற்றுக் கொண்டனர்.

---



தகப்பனார் (துள்ளிக் குதிக்கும் பையனைப்பார்த்து):-என்னடா ராமு! பரீட்சையில் பெயில் பண்ணி விட்டு வந்து இப்படி ஒரே யடியாய்க் குதிக்கிறாயே? உனக்கு வெட்கமா யில்லையா?

பையன்:—பரீட்சை பெயிலாப் போனால் பரவாயில்லை, அப்பா! இன்னும் சிலரைப்போல் பரீட்சை பெயிலானதற்காக ஆற்றிலே குளத்திலே விழுந்து விடாமல் உனக்குப் பிள்ளையாயிருக்கேனே! அதை நினைத்துத்தான் குதூகலப் படுகிறேனே!

நிறுத்த வேண்டி யிருந்தது. அதற்குப் பிறகு தேசத் தொண்டுக்கே நேரம் சரியா யிருந்தபடியால் ஸ்ரீ வல்லபாய் வக்கீல் தொழில் செய்யவே முடியவில்லை.

கெயிரா ஜில்லாவின் தலைநகரான நதியாத் நகரத்தில் இருந்த அநாதாசிரமத்தில் மகாத்மாவும் அவருடைய துணைவர்களும் தங்கினார்கள். வரிகொடாமை இயக்கத்தைச் சேரும் விவசாயிகளிடம் கையெழுத்து வாங்குவதற்கென்று பின்வரும் உறுதிமொழி தயாரிக்கப்பட்டது:—

"எங்கள் கிராமங்களில் மகசூல் இவ் வருடம் காலணா மதிப்புக்குக் குறைவான தென்று கண்கறிந்த நாங்கள் அடுத்த வருஷம் வரையில் நிலவரி வசூலை நிறுத்தி வைக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டோம். ஆனால் அரசாங்கம் எங்கள் பிரார்த்தனைக்கு இணங்கவில்லை. ஆகையால் இவ்வருஷத்து நிலவரி முழுதையுமோ அல்லது பாக்கியுள்ள பகுதியையோ நாங்களாகச் செலுத்துவதில்லை யென்று சத்தியம் செய்கிறோம். அரசாங்கம் சட்ட பூர்வமான நடவடிக்கைகள் என்ன நடத்தினாலும் பொறுத்திருந்து வரிகொடாமையின் பயன்களை மகிழ்ச்சியுடன் அனுபவிப்போம். எங்களுடைய நிலங்களை பறிமுதல் செய்யப்பட்டாலும் சகித்துக் கொண்டிருப்போமே யல்லாமல் நாங்களாக வலியத் தீர்வை செலுத்த மாட்டோம். ஆனால் ஜில்லா முழுவதும் இரண்டாவது தவணை வரி வசூலிப்பதை நிறுத்திவிட அரசாங்கத்தார் இணங்கினால் எங்களில் பணம் கொடுக்கக் கூடியவர்கள் வரி முழுமையுமோ பாக்கியுள்ள பகுதியையோ கொடுத்து விடுவோம். வரி கொடுக்கக் கூடிய நிலையிலுள்ளவர்களும் கொடாமலிருப்பதற்குக் காரணமென்னவென்றால், அவர்கள் கொடுத்துவிடின் ஏழை மிராசுதார்களும் பீதியடைந்து தங்களுடைய உடைமைகளை விற்கவும் கடன் வாங்கவும் ஆரம்பித்து அதனால் தங்களுக்குச் சொல்ல முடியாத துன்பங்களை வருவித்துக் கொள்வார்கள் என்பதுதான். இந்நிலைமையில் ஏழைகளின் நன்மையை உத்தேசித்துப் பணம் செலுத்த சக்தியுடையவர்களும் செலுத்தாமலிருத்தல் கடமையாகுமென்று கருதுகிறோம்."

பிறகு காந்திஜியும் அவருடைய துணைவர்களும் கிராமம் கிராமமாகச் சென்று சத்தியாக்கிரஹ தத்துவத்தை விளக்கிச் சொல்லி மேற்படி உறுதி மொழியில் கையெழுத்து வாங்கத் தொடங்கினார்கள்.

வரிகொடாமை இயக்கத்தின் ஆரம்பத்தில் சர்க்கார் அதிகாரிகள் கடுமையான நடவடிக்கைகளைக் கைக் கொள்ளவில்லை. இயக்கத்துக்கு அதிக செல்வாக்கு ஏற்படாது என்றும், கொஞ்சம் பயமுறுத்தினால் விவசாயிகள் வரி செலுத்தி விடுவார்கள் என்றும் நம்பினார்கள். ஆனால் அவர்கள் நினைத்தபடி நடக்கவில்லை. ஜில்லா முழுதும் விவசாயிகள் ஒரே உறுதியாக வரிகொடாமல் இருந்து வந்தார்கள். பிறகு அரசாங்கத்தின் அடக்கு முறை ஆரம்பமாயிற்று. கையில் அகப்பட்ட ஜங்கம சொத்துக்களை யெல்லாம் அதிகாரிகள் ஜப்தி செய்யத் தொடங்கினார்கள். ஆடுமாடுகளை ஜப்தி செய்து ஏலம் போட்டார்கள். வரிகொடாதவர்கள் எல்லாருக்கும் அபராத அறிக்கைகள் அனுப்பப்பட்டன. கடைசியில் மகசூலையும் ஜப்தி செய்யத் தொடங்கினார்கள்.

இதனால் விவசாயிகளுடைய உறுதி குலையத் தொடங்கியது. வயலில் விளைந்திருப்பது நாவில் ஒரு பங்கு மகசூல். அதையும் அதிகாரிகள் ஜப்தி செய்து கொண்டு போய்விட்டால், வருஷம் முழுவதும் சாப்பிடுவது எப்படி? அடுத்த பஸலி சாகுபடிக்கு விதைக்கு எங்கே போவது? மாடுகளை அதிகாரிகள் கொண்டு போய் ஏலம் போட்டு விற்றுவிட்டால், வயல்களை எவ்வாறு உழுவது?

விவசாயிகளில் சிலர் உறுதி தளர்ந்து வரி கொடுக்கத் தொடங்கினார்கள். இன்னும் சிலர் ஜங்கம சொத்துக்களில் அவசியமில்லாத பொருள்களை வீட்டு வாசலில் கொண்டுவந்து வைத்தார்கள். அச்சாமான்களை வீணாக்காமல் கொண்டு போய் ஏலம் போடட்டும் என்பது அவர்கள் கருத்து.

ஆனால் ஒரு பகுதியார் தாங்கள் அடியோடு அழிந்து போனாலும் வரி கொடுப்பதில்லை என்று உறுதியோடிருந்தார்கள்.

உறுதி குலைந்து வர்த விவசாயிகளுக்குத் தைரியம் ஊட்டுவதற்கு மகாத்மா வழி தேடிக் கொண்டிருந்தார். அத்தகைய சந்தர்ப்பம் ஒன்று ஏற்பட்டது. ஒரு வயலில் இருந்த வெங்காய மகசூலை அதிகாரிகள் தவறாக ஜப்தி செய்ய உத்தரவு போட்டிருந்தார்கள். மகசூலை ஜப்தி செய்வதே கொடுமையான காரியம் என்பது மகாத்மாவின் கருத்து. அதிலும் குறிப்பிட்ட இந்த வயலில் ஜப்தி உத்தரவே காரணமின்றிப் போடப்பட்டிருந்தது. ஆகையால் ஜப்தி உத்தரவைப் புறக்கணித்து வெங்காயத்தை அப்புறப் படுத்தும்படி மகாத்மா யோசனை சொன்னார். ஸ்ரீ மோகன்லால் பாண்டியாவின் தலைமையில் சில தொண்டர்கள் அவ் விதமே செய்தார்கள். உடனே அவர்கள் கைது செய்யப் பட்டார்கள். விசாரணை தினத்தன்று கோர்ட்டில் ஏராளமான ஜனக்கூட்டம் கூடி விட்டது. ஸ்ரீ மோகன்

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 10. கெயிரா சத்தியாக்கிரஹம்

கெயிரா என்றும் கேதா என்றும் சொல்லப்பட்ட ஜில்லா குஜராத்தில் உள்ளது. 1917-ம் வருஷத்தில் அந்த ஜில்லாவில் மழை பெய்யாமையால் விளைச்சல் வெகுவாகக் குறைந்து போயிருந்தது. விவசாயிகள் நிலவரி கொடுக்க முடியாத நிலைமையில் இருந்தார்கள். மகாத்மா சம்பாரன் விசாரணையில் ஈடுபட்டு அவ்விசாரணை முடியும் தறுவாயில் இருந்த போது ஆமதாபாத் தொழிலாளர் சம்பந்தமாக வந்த கடிதத்தைப் போலவே கெயிரா ஜில்லாவிலிருந்தும் ஒரு கடிதம் வந்தது. ஸ்ரீ மோகன்லால் பாண்டியா, ஸ்ரீ சங்கர்லால் பாரிக் ஆகியவர்கள் அக்கடிதம் எழுதியிருந்தார்கள். விளைவு குறைந்து விட்டதால் வரி கொடுக்க முடியாத நிலைமையில் இருந்த குடியானவர்களுக்கு மகாத்மா வந்து வழிகாட்ட வேண்டும் என்று எழுதியிருந்தார்கள்.

எனவே ஆமதாபாத் தொழிலாளர் பிரச்னை ஒருவாறு முடிந்ததும் காந்திஜி கெயிரா ஜில்லாவின் தலைநகரான நதியாத்துக்குப் போய்ச் சேர்ந்தார்.

காந்திஜிக்கு முன்னாலேயே ஸ்ரீ அமிருதலால் தாக்கர் (தக்கர் பாபா) கெயிராவுக்குப் போய் அங்குள்ள நிலைமையைத் தெரிந்து கொண்டிருந்தார். ஏறக்குறைய பஞ்சம் என்று சொல்லக்கூடிய நிலைமை மேற்படி ஜில்லாவில் ஏற்பட்டிருந்தது. ஒரு ரூபாய்க்கு நாலு அணா விதமோ அதற்குக் குறைவாகவோ மகசூல் கண்டிருந்தால் அந்த வருஷத்தில் வரி வசூலைத் தள்ளி வைப்பதற்கு சர்க்கார் நிலவரிச் சட்டங்கள் இடங் கொடுத்தன. நாலு அணா விகிதத்துக்குக் குறைவாகவே மகசூல் கண்டிருப்பதாக விவசாயிகள் சொன்னார்கள். சர்க்கார் அதிகாரிகளோ நாலு அணா விகிதத்துக்கு மேல் மகசூல் கண்டிருக்கிறதென்று சாதித்தார்கள். நடுநிலைமையுடன் ஆராய்ந்த தக்கர் பாபா போன்றவர்கள் குடியானவர்களின் கட்சிதான் உண்மையானது என்று கூறினார்கள். ஸ்ரீ தக்கர் பாபா இது குறித்துக் கமிஷனர் துரையுடன் கலந்து பேசியிருந்தார். ஸ்ரீ வித்தல் பாய் படேல், ஸர் கோகுல்தாஸ் பாரெக் ஆகியவர்கள் பம்பாய்ச் சட்டசபையில் இந்தப் பிரச்னையைக் கிளப்பியிருந்தார்கள். அதனால் ஒன்றும் பயன் விளையவில்லை. குடியானவர்களின் கோரிக்கையோ மிகவும் மிதமானது. வரி வசூலை ஒரு வருஷத்துக்குத் தள்ளிப் போடும்படிதான் அவர்கள் கேட்டார்கள். இதைச் சர்க்கார் நேரடியாக ஒப்புக்கொள்ள முடியாவிட்டால், மூன்றாவது மனிதர்களின் மத்தியஸ்தத்துக்கு விட்டுவிடும்படி சொன்னார்கள். இதற்கும் அதிகாரிகள் இணங்கவில்லை. வரியை வசூலித்தே தீர்வது என்று ஒரே மூர்த்தன்யமாயிருந்தார்கள். காந்திஜி எல்லா விஷயங்களையும் ஆராய்ந்து பார்த்துவிட்டு, "வேறு வழியில்லை; குடியானவர்கள் வரி கொடுக்க மறுத்துச் சத்தியாக்கிரஹம் செய்ய வேண்டியதுதான்!" என்ற முடிவுக்கு வந்தார். அவ்வாறே கெயிரா ஜில்லா விவசாயிகளுக்கு மகாத்மா யோசனை கூறியதுடன் வரிகொடா இயக்கத்தைத் தாமே தலைமை வகித்து நடத்தவும் ஒப்புக்கொண்டார்.

கெயிரா சத்தியாக்கிரஹத்தில் மகாத்மாவுக்குத் துணைபுரிவதற்காக ஸ்ரீ வல்லபாய் படேல், ஸ்ரீ சங்கர்லால் பாங்கர், ஸ்ரீ இந்துலால் யாக்னிக், ஸ்ரீ மகாதேவ தேசாய், ஸ்ரீ அனுசூயா பாய் முதலியோர் வந்து சேர்ந்தார்கள். இவர்கள் அனைவரும் பின்னர் காந்தி மகானையே பரம குருவாகக் கொண்டு தேசத்தொண்டு ஆற்றுவதற்குத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்துவிட்டார்கள். கெயிரா சத்தியாக்கிரஹத்தின் போதே ஸ்ரீ வல்லபாய் படேல் ஏராளமான வருமானம் அளித்துவந்த தமது வக்கீல் தொழிலை

முதன் முதலிலே ராஜாஜி விற்பனை வரி போடத் தீர்மானித்தபோது வியாபாரிகள் எதிர்த்தார்கள். சென்னையில் கொத்தவால் சாவடியில் ஒரு பொதுக் கூட்டம் நடத்த ராஜாஜி ஏற்பாடு செய்தார். கூட்டத்துக்கு வந்திருந்த வியாபாரிகள் ராஜாஜியின் பேச்சைக் கேட்ட பிறகு ஏகமனதாக விற்பனை வரி போட வேண்டியதுதான் என்று கையைத் தூக்கி வோட்டுக் கொடுத்தார்கள்.

புதிய வரிகளைப் போட்டால் ராஜாஜியைப் போல் காரண காரியங்களை எடுத்துக் கூறிச் சம்பந்தப்பட்டவர்களை ஒப்புக் கொள்ளச் செய்யவேண்டும். அதற்குச் சாமர்த்தியம் இல்லாவிட்டால் அந்த மாதிரி காரியத்தில் இறங்கவே கூடாது.

இப்போது பாருங்கள்: நம் நிதிமந்திரி கோபால் ரெட்டி போட உத்தேசித்திருந்த வரிகள் பலவற்றைச் சட்டசபை செலக்ட் கமிட்டியும் காங்கிரஸ் கட்சியுமே அடித்துத் தள்ளிவிட்டன. அந்த யோசனைகளைக் கனம் கோபால ரெட்டி வெளியிட்டதனால் வீணாகக் காங்கிரஸுக்குக் கெட்ட பெயர் ஏற்பட்டது.

(2) முன்னே யெல்லாம் காங்கிரஸ் ஸ்தாபனம் அதன் செல்வாக்குக் காரணமாக யாரை வேண்டுமானாலும் தேர்தல்களில் அபேட்சகராக நிறுத்தி வந்தது. இது இனிமேல் பலிக்காது. தியாகமும் சீலமும் திறமையும் சேவை நிகார்டும் உள்ளவர்களையே அபேட்சகராகக் காங்கிரஸ் நிறுத்த வேண்டும்.

ஏப்ரல் மாதத்தில் பம்பாயில் நடந்த ஒரு உப தேர்தலில் காங்கிரஸ் தோல்வியடைந்துவிட்டது. வெற்றி பெற்றவர் ஸோஷலிஸ்ட் அபேட்சகர் நிரிகம் தாஸ். நல்ல தொண்டினால் அவர் செல்வாக்குப் பெற்றவர். காங்கிரஸ் அபேட்சகரைப் பற்றி ஸோஷலிஸ்ட் கட்சியாரின் பிரசாரத்தில் என்ன சொன்னார்கள் தெரியுமா?

"முன்னே யெல்லாம் காங்கிரஸ் பெயரால் ஒரு லாந்தர்க் கம்பத்தை நிறுத்தி வைத்தாலும் வோட்டுக் கொடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். அப்போது நிறுத்தி வைத்த லாந்தர்க் கம்பங்களின் தலையில் விளக்காவது இருந்தது. கற்றிலும் அதன் ஒளி வீசியது. ஆனால் இப்போது விளக்கில்லாத வெறும் லாந்தர்க் கம்பத்தை நிறுத்தி வைக்கிறார்கள்!"

பம்பாயில் காங்கிரஸ் அபேட்சகரின் நியமனம் மேற்படி உவமானத்துக்குப் பொருத்தமாயிருந்தது. ஆகையால் அவர் தோல்வி யடைந்து ஸோஷலிஸ்ட் அபேட்சகர் ஜெயித்தார். கல்கத்தாவிலும் அம்மாதிரியே நடந்திருப்பதைக் காண்கிறோம். சரத் சந்திர போஸுக்கு எதிராக நியமிக்கப் பட்டவரைப் பற்றி நமக்கு அவ்வளவாக ஒன்றும் தெரியாது.

பம்பாயிலும் கல்கத்தாவிலும் அடைந்த அநுபவம் சென்னை முதலிய மற்ற மாகாணங்களுக்கும் பயன்பட வேண்டும். திறமையும் ஒழுக்கமும் இல்லாதவர்களையும் அரசியல் அறிவு இல்லாதவர்களையும் பழைய தியாகங்களைப் பணமாக்க ஆசைப்படுகிறவர்களையும் தேர்தல்களில் அபேட்சகராக நியமிக்கக் கூடாது.

வங்காளிகள் உணர்ச்சி மிக்கவர்கள்; சமீபத்தில் அதிக கஷ்ட நஷ்டங்களை அநுபவித்தவர்கள்; ஆகையால் தங்களுடைய ஆத்திரத்தை அதிவிரைவிலேயே அவர்கள் காட்டி விட்டிருக்கிறார்கள்.

மற்ற மாகாணங்களின் ஜனங்கள் அவ்வளவு ஆத்திரப் படாதவர்கள்; பொறுமை படைத்தவர்கள். எனினும் அவர்களுடைய பொறுமையை ரொம்பவும் சோதித்து விடவேண்டாம் என்று காங்கிரஸ் மந்திரிகளையும் காங்கிரஸ் நிர்வாகிகளையும் வேண்டிக் கொள்கிறோம்.




ஒருவர்:— அப்பனே! சித்தி விநாயகா! பரீட்சைக்குப்போன அத்தனை பிள்ளைகளும் பெயில் ஆகவேணும்! ஒருவரும் பாஸ் செய்யக்கூடாது!

பக்கத்தில் நிற்பவர்:— இது என்ன ஐயா, விபரீதம்? எல்லாரும் பாஸ் பண்ண வேண்டும் என்றல்லவா வேண்டிக் கொள்வார்கள்? நீங்கள் பெயில் ஆகவேணும் என்று பிரார்த்திக்கிறீர்களே?

முதல்வர்:— நான் டியூடோரியல் காலேஜ் வைத்திருக்கிறேன் சார்! எல்லோரும் பாஸ் ஆகி விட்டால் என் காலேஜ் என்ன ஆகிறது?

# கல்கத்தா தோல்வி

ஆதிகாலத்தில் இரண்டு பிரசித்தி பெற்ற மல்லர்கள் துவந்த யுத்தம் செய்தார்கள் அதைப் பார்க்கத் திரளான ஜனங்கள் கூடியிருந்தார்கள். பிரமாதமான வீர வாதங்களைச் செய்துகொண்டு இரண்டு மல்லர்களும் தடபுடலாய்ச் சண்டை போட்டுக் கொண்டிருக்கையில் ஒரு மல்லன் இன்னொரு மல்லனைத் தூக்கி எறிந்து தரையில் குப்புற விழும்படியாகச் செய்துவிட்டான். அந்தக் காலத்து மல்யுத்த விதிகளின் பிரகாரம் குப்புற விழுந்தவன் தோல்வி யடைந்தவனுகக் கருதப்படுவது வழக்கம். ஆனால் இந்தப் பிரசித்தி பெற்ற துவந்த யுத்தத்தில் குப்புற விழுந்த மல்லன் உடனே துள்ளிக் குதித்து எழுந்து நின்று, "கனதனவான்களே! நான் குப்புற விழுந்தது என்னமோ உண்மைதான்! ஆனால் கொஞ்சம் என் முகத்தை நன்றாய்ப் பாருங்கள். என் முகத்திலுள்ள மீசையில் ஒரு துளி மண்ணாவது பட்டிருக்கிறதா என்று கவனித்துப் பாருங்கள்! குப்புற விழுந்த போதிலும் என் மீசையில் எப்போது மண் ஒட்டவில்லையோ, அப்போது நான் தோல்வி யடைந்தவன் ஆவேனா? மகாஜனங்களே! சிந்தித்துத் தீர்ப்புக் கூறுங்கள்!" என்றான்.

இதைக் கேட்டவுடனே அங்கே கூடியிருந்த பதினாயிரம் ஜனங்களும் அந்த மல்லனுடைய கேள்வியைப் பற்றி விவாதிக்கத் தொடங்கினார்கள். அவர்களிடமிருந்து விஷயத்தை யறிந்து நாட்டிலும் நகரத்திலும் உள்ள சகல ஜனங்களும் அந்தப் பிரச்னையைப் பற்றி விவாதிக்கத் தொடங்கினார்கள். அன்று ஆரம்பித்த விவாதமானது இன்றுவரையில் நடந்து கொண்டுதான் இருக்கிறது. "குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டாவிட்டால் அது தோல்வி யாகுமா?" என்னும் மகத்தான பிரச்னை இன்னமும் முடிவான பாடாயில்லை!

ஏறக்குறைய அம்மாதிரியான முக்கிய பிரச்னை ஒன்று நம்முடைய தேசத்தில் சென்ற வாரத்தில் கிளம்பியிருக்கிறது. கல்கத்தா நகரத்தில் நடந்த உபதேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர் தோற்றுப்போய் அவரை எதிர்த்த ஸ்ரீ சரத் சந்திரபோஸ் வெற்றி அடைந்தார். காங்கிரஸ் அபேட்சகருக்கு 6000 வோட்டுகளும் சரத்போஸுக்கு 19,000 வோட்டுகளும் கிடைத்தன. இப்படியாக 13,000 அதிக வோட்டுகளைப் பெற்றுக் காங்கிரஸுக்கு எதிரான அபேட்சகர் வெற்றி அடைந்திருந்தாலும் "காங்கிரஸுக்கு இது உண்மையில் தோல்வியாகுமா?" என்ற கேள்வி ஏற்பட்டு அதைப் பற்றி நாடெங்கும் விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. காங்கிரஸ் பிரமுகர்களில் சிலர் இது காங்கிரஸின் தோல்வி அல்ல என்று நிரூபித்து விடுவதற்குப் பாடுபடுகிறார்கள். வேறு சிலர் அவ்வளவு அப்பட்டமாக முழுப் பூசனிக்காயைச் சோற்றிலே மறைக்கப் பார்க்காமல் கல்கத்தா காங்கிரஸ் அபேட்சகரின் தோல்விக்குக் காரணங்களை எடுத்துக் கூறி, "ஆகையால் மேற்படி தோல்வியில் ஆச்சரியம் ஒன்றுமில்லை!" என்று முடிக்கிறார்கள். கல்கத்தாவிலே காங்கிரஸ் அபேட்சகர் தோல்வியடைந்ததால் காங்கிரஸின் செல்வாக்கு தேசத்தில் குறைந்து விட்டது என்று முடிவு கட்டக்கூடாது என்ற சித்தாந்தத்தையும் வெளியிடுகிறார்கள்.

* * *

சரத் போஸின் வெற்றிக்கு அவர்கள் கூறும் காரணம் ஒன்று என்னவென்றால், அவர் நேதாஜி சுபாஷ் சந்திர போஸின் சகோதரர் என்பது.

இது பொருளற்ற வாதம் என்பதை எளிதில் நிரூபித்து விடலாம்.

சுபாஷ் பாபுவின் புகழ் இன்றைவிட உச்சநிலையில் இருந்த காலத்தில் ராஜாஜி வங்காள கவர்னராகக் கல்கத்தாவுக்குச் சென்றார். ராஜாஜியைக் கவர்னராக நியமித்ததைக் கண்டிப்பதற்காக சரத்பாபு ஒரு கூட்டம் கூட்டினார். அதற்குக் கல்கத்தாவிலுள்ள நாற்பது லட்சம் பேரில் சுமார் நூறு பேர்கூட வரவில்லை!

ராஜாஜி வங்காள கவர்னராயிருந்த வரையில் சரத் பாபுவின் பேச்சுக்குக் கல்கத்தாவில் மதிப்பே ஏற்படவில்லை. அப்போதும் அவர் நேதாஜி சுபாஷ் போஸின் சகோதரர்தானே?

அதே சரத் பாபு இன்றைக்கு ஸ்விட்ஜர்லந்தில் இருந்துகொண்டே கல்கத்தாவில் நடந்த தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்துப் பிரமாதமான வெற்றியடைந்திருக்கிறார். ஆகையால் இந்த வெற்றிக்கு வேறு காரணந்தான் தேட வேண்டும்.

சரத்பாபுவின் வெற்றிக்குச் சொல்லப்படும் மற்றொரு காரணம் தேர்தலின் போது கல்கத்தாவில் நடந்த காலித்தனம், பலாத்காரம் முதலியவை.

இதுவும் அர்த்தமில்லாத பேச்சுத்தான். காலித்தனத்தினாலும் பலாத்காரத்தினாலும் சில பயந்த வோட்டர்களை வோட்

டுக் கொடுக்க வரவொட்டாமல் செய்வது சாத்தியமாகலாம். ஆனால் இருபதினாயிரம் பேரைப் பலாத்காரப்படுத்தி வோட்டுப் போடும்படி செய்ய முடியாது.

பிரிட்டிஷ் சர்க்காரின் பலம் பூராவும் காங்கிரஸுக்கு எதிராக இருந்தபோது ஜனங்கள் காங்கிரஸ் அபேட்சகர்களுக்கே வோட்டுக் கொடுத்திருக்கிறார்கள். தாட்சண்யத்துக்காக எதிரி அபேட்சகர்களின் வண்டிகளில் வந்துகூட மஞ்சள் பெட்டியில் வோட்டுப் போட்டிருக்கிறார்கள்! வோட்டுப் போடுவதில் இரகசிய முறை இந்தியாவில் அனுஷ்டானத்தில் இருந்து வருகிறது. ஆகையால் இஷ்டப் பட்டவர்களுக்கு வோட்டுப் போடுவதைக் காலித்தனத்தினால் தடுத்துவிட முடியாது.

எனவே உண்மையை மறைக்க இல்லாத காரணங்களைக் கண்டுபிடித்துச் சப்பைக் கட்டுக் கட்டுவதில் உபயோகமில்லை.

•   •   •

கல்கத்தா தேர்தல் முடிவைச் 'சரத் பாபுவின் வெற்றி' என்று சொல்வதைக் காட்டிலும் 'காங்கிரஸின் தோல்வி' என்று சொல்வதுதான் அதிகப் பொருத்தம்.

அந்தத் தேர்தல் முடிவிலிருந்து இரண்டு விஷயங்கள் தெள்ளத் தெளிய ஏற்படுகின்றன.

1. மேற்கு வங்காள காங்கிரஸ் மந்திரிகளின்மீது கல்கத்தா பொது மக்களுக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது.

2. மேற்கு வங்காள காங்கிரஸ் ஸ்தாபனம் பொது மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்டிருக்கிறது.

இந்த இரண்டு முடிவுகளுக்கும் போதுமான காரணங்கள் இருக்கின்றன.

மேற்கு வங்காளம் ஏற்பட்ட புதிதில் டாக்டர் பிரபுல்ல கோஷ் என்பவர் அந்த மாகாணப் பிரதம மந்திரியானார். அவருடைய திறமையைப் பற்றியோ தூய்மையைப் பற்றியோ யாரும் எந்தவிதமான குறையும் சொல்லவில்லை. ஆயினும் திடீரென்று ஒரு நாள் மேற்கு வங்காள எம். எல். ஏ.க்கள் கூட்டம் கூடி டாக்டர் கோஷுக்குப் பதிலாக டாக்டர் பிதன் சந்திர ராயைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். இந்த மாறுதல் எதற்காக என்று சொல்லப்படவே இல்லை.

டாக்டர் பி. ஸி. ராயை இந்திய சர்க்கார் முதன் முதலில் ஐக்கிய மாகாண கவர்னராக நியமித்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம். டாக்டர் ராய் கவர்னர் பதவி தமக்கு வேண்டாம் என்று மறுதளித்துவிட்டார். பிறகு அவர் காத்திருந்து அரசியல் சூழ்ச்சிகள் செய்து வங்கப் பிரதம மந்திரியானார் என்று வங்க மக்களிடையே அபிப்பிராயம் ஏற்பட்டது.

புதிய மந்திரி சபையில் டாக்டர் பி. ஸி. ராய்க்கு வலது கை போன்றவர் ஸ்ரீ நளினி ரஞ்சன் சர்க்கார். இவர்கள் பொதுமக்களின் நலனைக் கவனியாமல் முதலாளிகள்—பணக்காரர்களின் நன்மையையே கவனிப்பார்கள் என்ற அபிப்பிராயம் பரவியிருக்கிறது. இன்னும் பல ஊழல் குற்றங்களும் அவர்கள்பேரில் சொல்லப்படுவது உண்டு. இவ்வாறு வங்க காங்கிரஸ் மந்திரி சபையின் பேரில் பொதுமக்களுக்கு உள்ள கோபம் சரத் பாபுவின் வெற்றிக்கு ஒரு முக்கிய காரணமாயிற்று.

அதோடு வங்க மாகாண காங்கிரஸ் கமிட்டியிலே ஊழல்களும் கட்சிச் சண்டைகளும் மலிந்துவிட்டன. இந்த நிலைமை பொதுமக்களின் அதிருப்தியை வளர்த்துக் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பேரிலேயே அவர்களுக்குக் கோபத்தை உண்டாக்கி விட்டது.

ஆகவே கல்கத்தாவில் காங்கிரஸ் அபேட்சகர் அடைந்த தோல்விக்கு ஸ்ரீ சரத் போஸின் செல்வாக்கோ சரத் பாபு கட்சியாரின் பலாத்காரமோ காரணம் அல்ல; காங்கிரஸ் மந்திரி சபை, காங்கிரஸ் ஸ்தாபனம் இவற்றின் ஊழல்களே காரணமாகும்.

•   •   •

கல்கத்தா தோல்வியிலிருந்து அரசியல் வாதிகள் அறியவேண்டிய விஷயங்கள் என்னவென்பதை இப்போது பார்க்கலாம்:

(1) 1947-ம் ஆண்டு வரையில் காங்கிரஸ் மகத்தான தியாகங்களைச் செய்து போராட்டம் நடத்தி வந்தது. காந்தி மகாத்மாவின் ஆத்ம பலமும் சேர்ந்தது. இதனாலெல்லாம் காங்கிரஸ் ஸ்தாபனம் சேர்த்திருக்கும் மூலதனம் கற்பகோடி காலம் கரையாமல் இருக்குமென்று எதிர்பார்க்கக் கூடாது. காங்கிரஸ் மந்திரிகளும் காங்கிரஸ் ஸ்தாபனங்களும் சரிவர நடந்து கொள்ளாவிட்டால் அந்த மூலதனம் மளமளவென்று கரைந்துவிடும்.

ஆகையினால் பொது ஜனங்களுக்கு நன்மையான காரியங்களைச் செய்வதில் காங்கிரஸ் மந்திரிகளும் காங்கிரஸ் வாதிகளும் கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும். பழைய பெயரை வைத்துக்கொண்டு என்ன வேணுமானாலும் செய்யலாம் என்ற அலட்சிய பாவம் உதவாது.

பொது ஜனங்களை ஓரளவு பாதிக்கும் காரியம் எதையேனும் அவசியமாகச் செய்யும்படி நேர்ந்தாலும் அதைக் காங்கிரஸ்காரர்கள் அலட்சிய புத்தியுடன் செய்யக் கூடாது. செய்ய நேர்ந்த காரணத்தைப் பொதுஜனங்களுக்கு விளக்கிச் சொல்ல வேண்டும்.

அதுபோலவே டூப்ளே என்ற பிரஞ்சு ராஜதந்திரி இந்தியாவில் பிரஞ்சு சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்தார்.

டூப்ளே சந்திர நாகூரின் கவர்னராக இருந்தபோது அந்த நகரம் மிகவும் சுபிட்சமாக இருந்தது என்றும், அவர் அதை விட்டுச் சென்ற பின் கிளைவ் அதன் மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினார் என்றும் சரித்திரம் கூறுகிறது. பிறகு அது பிரஞ்சுக்காரர் கைக்கும் ஆங்கிலேயர் கைக்கும் மாறி மாறி வந்து கொண்டிருந்தது.

1816-ம் வருஷம் சந்திரநாகூர் இறுதியாகப் பிரஞ்சுக்காரர் ஆதிக்கத்தில் வந்து சேர்ந்தது.

எனவே, சாம்ராஜ்ய வெறிகொண்ட கிளைவும் டூப்ளேயும் அரசியல் சதுரங்கம் ஆடிய சந்திரநாகூர் சரித்திரப் பிரசித்தி பெற்றதில் ஆச்சரியமில்லை.

• • •

மதுபானம், சுயநலம், சொந்தச் செல்வாக்கு போன்ற "அற்ப சுகத்தை நினைந்து ஆனந்த சுதந்திரத்தை இழப்பதா?" என்று முந்திய இதழ் ஒன்றில் நாம் குறிப்பிட்டிருந்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம்.

அற்ப சுகத்தை நினைந்து ஆனந்த சுதந்திரத்தை இழக்க மாட்டோம் என்பதைச் சந்திரநாகூர் ஜனங்கள் நிரூபித்து விட்டார்கள்.

"இந்தியாவுடன் ஐக்கியம் அடைவோம் என்று ஜனநாயக முறைப்படி தங்களுடைய அபிப்ராயத்தைத் தெரிவித்த சந்திரநாகூர் ஜனங்களின் தீர்மானம் எமக்கும் எமது சகாக்களுக்கும் மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுத்திருக்கிறது. இந்த மகிழ்ச்சியில் இந்திய ஜனங்களும் பங்கெடுத்துக் கொள்ளுவார்கள் என்பதில் சந்தேகமில்லை. இந்தியக் குடியரசுடன் ஐக்கியமடைய சந்திரநாகூரை வரவேற்கிறோம். இந்த மகத்தான தேசத்தின் சுதந்திரத்தில் இனி சந்திரநாகூர் ஜனங்களுக்கும் பூரண உரிமையுண்டு" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு பாராட்டியிருப்பதைக் கண்டு சந்திரநாகூர் ஜனங்கள் உள்ளம் பூரித்துப் பெருமை அடைவார்கள்.

மற்ற பிரஞ்சுப் பிரதேசங்களான காரைக்கால், புதுச்சேரி, மாஹி, ஏனாம் ஜனங்களும் அவர்களுடைய வழியைப் பின்பற்றித் தங்களுடைய தேசபக்தியை உலகத்துக்கு எடுத்துக் காட்டுவார்கள் என்றும், இந்தியாவுக்கு மற்றொரு மகத்தான வெற்றி கிடைக்கும்படி செய்வார்கள் என்றும் எதிர்பார்க்கிறோம்.

சந்திரநாகூர் சர்வஜன வாக்கெடுப்பில் மற்றொரு விசேஷம் என்னவென்றால், அது மிகவும் அமைதியாகவும் ஒழுங்காகவும் நடைபெற்றதுதான். தேர்தலின்போது அங்கு யாதொரு அசம்பாவிதமும் நடக்கவில்லை.

"இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே! இந்த நகர ஜனங்கள் இவ்வளவு அமைதியாகவும் கண்ணியமாகவும் நடந்து கொண்டதைக் குறித்து நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். இந்தியாவிலுள்ள மற்ற பிரஞ்சுப் பிரதேசங்களிலுள்ளவர்களும் சந்திரநாகூரின் வழியைப் பின்பற்றி அமைதியாகவும் சட்டவரம்புக்கு உட்பட்டும் நடந்து கொள்வார்கள் என்று நம்புகிறோம்" என்று சர்வதேசப் பார்வையாளர்களும் பாராட்டியிருக்கிறார்கள்.

அமைதியாக வோட்டுக் கொடுப்பதில் மாத்திரமல்ல. பிரஞ்சு ஆதிக்கத்துக்கு முற்றுப்புள்ளி வைப்பதிலும் சந்திரநாகூர் ஜனங்கள் காட்டிய வழியை மற்றப் பிரதேசங்களிலுள்ள ஜனங்கள் பின்பற்றி அடிமை வாழ்விலிருந்து விடுதலை பெறுவார்களாக!

சந்திரநாகூர் சர்வஜன வாக்கெடுப்பைப் பிரஞ்சு அதிகாரிகள் ஒத்தி வைக்க முயற்சி செய்தார்கள். அந்த முயற்சியை ஜனப் பிரதிநிதிகள் பலமாகக் கண்டிக்கவே வேறு வழியின்றி அதைக் கைவிட்டனர்.

இந்திய சர்க்காரின் சம்மதத்தைக் கேளாமல் சர்வதேசப் பார்வையாளரை நியமித்த பிரஞ்சு சர்க்கார், பிறகு அவ்விஷயமாக இந்திய சர்க்காரைக் கலந்தாலோசிப்பதாக உறுதி கூறியிருப்பதும் பாராட்டுவதற்கு உரியதே.

மற்றப் பிரதேசங்களில் நடக்கப் போகும் சர்வஜன வாக்கெடுப்பு விஷயத்திலும் பிரஞ்சு அதிகாரிகள் அதே தோரணையைக் கடைப் பிடிப்பார்களாயின், மேற்படி பிரச்னை சுமுகமாகத் தீருவதுடன் இந்தியா—பிரான்சின் நல்லுறவும் நிலைத்து நிற்கக்கூடும்.

---

**அடுத்த இதழில்**

"அணை கட்டுவோம்" என்னும் கட்டுரையின் பிற்பகுதி அடுத்த வாரக் "கல்கி" இதழில் வெளியாகும்.

# தூங்கிய நகரம் துள்ளி எழுந்தது!

சென்ற இருநூற்று அறுபது வருஷ காலமாக இழந்திருந்த ஆத்மாவை மீண்டும் பெற்றோம் என்று தேசபக்தர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள்!

''என் வாழ்க்கையில் நான் கொண்ட ஆசை நிறைவேறிவிட்டது. இனி நான் அமைதியாகக் கண்ணை மூடலாம்'' என்று தொண்ணூறு வயதுக் கிழவர் தள்ளாடிக் கொண்டே கூறினார்!

''இந்தியாவுக்கும் பிரான்சுக்கும் நடந்த தேர்தல் போட்டியில், பிரான்ஸ் ஜாமீன் தொகையை இழந்தது'' என்று ஒரு ஹாஸ்ய ரசிகர் தமது அபிப்பிராயத்தை வெளியிட்டார்!

''இந்தியாவுடன் ஐக்கியம் அடைவதா அல்லது பிரான்சின் ஆதிக்கத்திலேயே இருப்பதா?'' என்ற கேள்விக்குச் சந்திரநாகூர் ஜனங்கள் சந்தேகத்துக்கு இடமின்றிப் பதில் அளித்துவிட்டார்கள்.

அங்கு நடந்த சர்வஜன வாக்கெடுப்பில், இந்தியாவுடன் சேரவேண்டும் என்பதை ஆதரித்து 7473 பேர் வோட்டுக் கொடுத்தனர்; பிரான்சின் ஆதிக்கத்திலே இருக்கவேண்டும் என்பதை ஆதரித்து 114 பேர் வோட்டுக் கொடுத்தனர்.

அறுபதில் ஒருவர்கூட பிரான்சின் ஆதிக்கத்தில் இருப்பதை விரும்பவில்லை என்பது வெட்டவெளிச்சமாகத் தெரிந்துவிட்டது.

• • •

சந்திரநாகூருக்குத் ''தூங்கும் நகரம்'' என்ற ஒரு பெயர் உண்டு.

அந்த நகர் இரவில் மாத்திரம் தூங்குவதில்லை; பகலிலும் தூங்கிக் கொண்டிருக்கும்!

அதாவது சந்திர நாகூர் பகலில் பெரிதும் மனித சஞ்சார மற்ற பிரதேசமாகக் காட்சி அளிக்கும். ஏனெனில், அங்குள்ள ஜனங்கள் ஹூக்ளி நதியைக் கடந்து இந்தியப் பிரதேசங்களுக்குச் சென்றுவிடுவார்கள்.

பெரும்பாலானவர்கள் கல்கத்தாவிலும் கல்கத்தாவைச் சுற்றிலும் உள்ள கம்பெனிகளிலும் காரியாலயங்களிலும் தொழிற்சாலைகளிலும் சணல் மில்களிலும் வேலை செய்கிறார்கள்.

அங்கு பகலில் தலைமறைவாக இருக்க விரும்புவோரும், திருட்டுச் சாமான்களை விற்பவர்களும், கறுப்பு மார்க்கெட் வியாபாரிகளும்தான் நடமாடி வருவார்கள்.

எனவே, மேற்படி 'பிரமுகர்'களையும் மதுபான வகைகளில் மட்டற்ற மதிப்பு உடையவர்களையும் தவிர, மற்ற எல்லாரும் சந்திரநாகூர் ஜனங்கள் செய்துள்ள முடிவை மன மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை.

சந்திரநாகூர் மக்கள் கூறிய தீர்ப்பு சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்படுவதற்கு உரியது; சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்தது.

காலனி ஆட்சி முறையையும் ஏகாதிபத்திய ஸ்பரிசத்தையும் ஜனங்கள் வெறுக்கின்றனர் என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

மேற்படி தீர்ப்பு சந்திரநாகூர் ஜனங்களுக்கு மாத்திரமல்ல, இந்தியாவுக்கும் ஒரு பெரிய வெற்றி. இந்தியாவிலுள்ள மற்ற பிரெஞ்சுப் பிரதேசங்களுக்கும் அது சிறந்த வழிகாட்டியாக அமைந்திருக்கிறது.

• • •

1674-ம் வருஷத்தில் பிரஞ்சுக்காரர்கள் காலடி வைத்த சந்திரநாகூரின் உருவம் சிறியதாயினும் அதன் கீர்த்தி பெரியது.

நாலு மைல் நீளமும் ஒரு மைல் அகலமும் அரை லட்சம் ஜனத்தொகையும் உள்ள அந்தச் சிறிய நகரம் இந்திய சரித்திரத்தில் முக்கிய இடம் பெற்றதற்குக் காரணம் உண்டு.

கிளைவ்தான் இந்தியாவில் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு விதை விதைத்தார்.

# தேசீய உயர்தரப் பெண்பாடசாலை

## கட்டிடத் திறப்புவிழா







கவர்னர் பவநகர் மகாராஜா அவர்களின் தலைமையில் பவநகர் மகாராணி அவர்கள் திருவல்லிக்கேணி தேசீயப் பெண் பாடசாலையின் அழகான புதிய கட்டிடத்தைத் திறந்து வைத்தார். காரியதரிசி ஸ்ரீ திருமலாச்சாரியார் தமது அறிக்கையைப் பெருமிதத்துடன் படித்து உதவி செய்தவர்களுக் கெல்லாம் விரிவாக நன்றி கூறினார்.

வைதீக முறையில் நடந்த மேற்படி புதுக் கட்டிட கிரஹப்பிரவேச விழாவில் திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் முருகன் புகழைப் பாடினார்கள். ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் ஆசி கூறினார்கள். வலது ஓரத்தில் அமர்ந்திருக்கும் பாடசாலைக் கமிட்டியின் தலைவர் டாக்டர் திரிமூர்த்தி அவர்களின் பரவசத்தைப் பாருங்கள்.

# நிதி மந்திரிக்குப் பரிசு!




... எனினும், அதற்காகப் பொது ஜனங்கள் ஆத்திரப்பட வேண்டாம் என்று நமது நிருபர் கேட்டுக் கொள்கிறார். ஏனென்றால், புதிய வரிகளை அழிக்கும் மாய யந்திரம் ஒன்றைச் சட்டசபை செலக்ட் கமிட்டிக்குக் கொடுக்கப் போகிறாராம்!

செலக்ட் கமிட்டி

அழிக்கும் மெஷின்

# பேஷான யோசனை! -நமது விசேஷ நிருபர் பேட்டி









பற்றிய உங்கள் நூல்கள் வெளியாகி யிருந்தால், அவற்றைத் தமிழ் வளர்ச்சிக் கழகத்துக்கு அனுப்பியாகி விட்டதா என்று தயவுசெய்து உங்கள் பிரசுர கர்த்தர்களைக் கேளுங்கள். அனுப்பியிரா விட்டால் உடனே இரண்டு பிரதிகள் அனுப்பச் செய்யுங்கள். இலங்கை, பர்மா, மலாய் முதலிய வெளிநாடுகளிலும் வட இந்தியாவிலும் பிரசுரமான தமிழ்ப் புத்தகங்களா யிருந்தாலும் அனுப்பி வைக்கலாம். தடை எதுவும் கிடையாது. ஆனால் ஜூலை மாதம் 15-ந் தேதிக்குள் புத்தகங்களை அனுப்பிவிட வேண்டும். தமிழ் எழுத்தாளர்களும் தமிழ்ப் புத்தகப் பிரசுர கர்த்தர்களும் இந்த நன் முயற்சி யில் பரிபூரணமாக ஒத்துழைக்கும்படி வேண்டிக் கொள்கிறோம். புத்தகம் அனுப்ப வேண்டிய விலாசம்: ஸ்ரீ பெரிய சாமித் தூரன், காரியதரிசி, தமிழ் வளர்ச்சிக் கழகம், யூனிவர்ஸிடி பில் டிங்ஸ், சேப்பாக்கம், சென்னை.

## இருவர் திருப்பணி

உண்மை உள்ளத்துடனும் உற்சாகத் துடனும் பொதுப்பணி தொடங்கினால் எவ்வளவு இடையூறுகளையும் தடங்கல் களையும் எதிர்த்துத் தாண்டி வெற்றி யடையலாம் என்பதற்குத் திருவல்லிக் கேணி தேசியப் பெண் பாடசாலை ஒரு சிறந்த உதாரணமாக விளங்குகிறது. பத்து வருஷத்துக்கு முன்னால் சென்னை சர்க்காரின் கல்வி டைரக்டராயிருந்த பிர சித்தி பெற்ற ஸ்டேதம் துரை தமது நண்பரான வக்கீல் திருமலாச்சாரியாரைப் பார்த்து, "திருவல்லிக்கேணியில் பெண் குழந்தைகள் படிக்க ஒரு பள்ளிக்கூடம் இல்லையே! நீங்கள் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கலாகாதா?" என்றார். வக்கீல் திருமலாச்சாரியார் "ஆரம்பிக்கலாம்; ஆனால் கையில் பணம் இல்லையே?" என் றார். ஸ்டேதம் துரை சட்டைப் பையில் கையை விட்டு, அதிலிருந்த நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து "இதோ பணம்! ஆரம்பியுங்கள்!" என்றார். நண்பரின் வேண்டுகோளைத் தட்டமுடி யாமல் ஸ்ரீ திருமலாச்சாரி ஆரம்பித்தார். அப்புறம் பெண் கல்விப் பைத்தியம் அவரைப் பலமாகப் பற்றிக்கொண்டது. வாழ்க்கையில் வேறு எந்த நோக்கமும் இல்லாமல் போய்விட்டது. டாக்டர் திருமூர்த்தி அவர்களைத் தலைவராகக் கொண்ட கமிட்டி ஒன்றை ஏற்படுத்திக் கொண்டார். இரண்டு பேரும் இரவுபகல் இதே தியானமாக ஓயாமல் ஒழியாமல் தொண்டு புரிந்தார்கள். யுத்தம் முடிந்து பணத்தட்டு ஏற்பட்டுவிட்ட நிலைமையில் பணம் வசூலிக்கத் தொடங்கி ஒரு லட்சம் ரூபாய்க்கு மேலே எப்படியோ சேகரம் செய்து ஒரு அழகான கட்டிடம் கட்டி முடித்துவிட்டார்கள். இந்த மாதத்தில் சிறப்பாகக் கிரஹப்பிரவேச வைபவமும் நடந்தேறிவிட்டது. ஆனாலும் பொதுத் தொண்டு செய்து ஓரளவு வெற்றி கண்ட வர்களால் சும்மா இருக்க முடியா தல்லவா? "ஆயிரம் பெண் குழந்தைகள் படிக்க இந்த ஒரு கட்டிடம் போதுமா? எந்த மூலைக்கு?" என்று சொல்லி மேலும் பள்ளிக்கூடத்தை வளர்க்கப் பாடுபடு கிறார்கள்; பொது ஜனங்களிடம் பணம் கேட்கிறார்கள். நல்ல தொண்டுக்கு முத லில் கஷ்டம் நேர்ந்தாலும் எப்படியும் உதவி வந்து சேர்ந்துவிடுகிறது. ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் அவர்கள் தம்முடைய அருமை அன்னையாரின் பெயரால் மண்ட பம் கட்ட இருபத்தையாயிரம் ரூபாய் கொடுத்திருக்கிறார். அது போலவே ஸ்ரீ கே. எஸ். நாராயண ஐயங்கார் அவர்கள் ஒரு கால் லட்சம் ரூபாய் அளித்திருக்கிறார். கால் லட்சத்திலிருந்து கால் ரூபாய் வரையில் பெண் குலத்தின் திருப்பணிக் குப் பெற்றுக் கொள்வதற்கு டாக்டர் திருமூர்த்தியும், ஸ்ரீ திருமலாச்சாரியும் எப்போதும் தயாரா யிருக்கிறார்கள். அவர்களுடைய நன் முயற்சி பூரண வெற்றி யடையட்டும் என்று பிரார்த்திக்க நாம் என்றைக்கும் தயாரா யிருக்கிறோம்.



ரேடியோ பாடகர்:— நம்ம பிரதமர் 'பத்திரிகைகள் மந்திரிகளுடன் ஒத் துழைக்காது போனால் ரேடியோவை உபயோகித்துக் கொள்கிறேன்' என்று சொல்லிவிட்டாராமே!

பிடில்காரர்:— ஐயையோ! அப்படி யானால், முன்னே நமக்கு ரேடியோ வில் கிடைத்த கொஞ்சம் நஞ்சம் சான் ஸும் இனிமேல் கிடைக்காதாக்கும்!




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 48

# என்ன சேதி?

## பிரமாதமாய் இராது

சென்னை மந்திரிகள்மீது புகார்களைப் பற்றி விசாரிக்க வந்த ஸ்ரீ சங்கரராவ் தேவ் தம் விசாரணையை நடத்தி விட்டுத் திரும்பிப் போய் விட்டார். விசாரணையின் முடிவு ஒன்றும் பிரமாதமாக இருந்து விடாது என்று நாம் எதிர்பார்க்கலாம். ஏனெனில் மாஜி மந்திரிகள் இப்போதைய மந்திரிகள் மீதும், இப்போதைய மந்திரிகள் மாஜி மந்திரிகள் மீதும் புகார்களைச் சொல்லியிருக்கிறார்கள். எல்லாரும் காங்கிரஸ் மந்திரிகள்; இன்னமும் காங்கிரஸ்காரர்கள் தான். சென்னை அரசியலில் ஊழல் மலிந்திருப்பதற்கு இதுவே போதிய அத்தாட்சியாகும். மற்றப்படி இருதரப்புப் புகார்களும் நிரூபிக்கக் கூடியனவாக இருக்க முடியாது. நிரூபிக்க முடியாத குற்றங்களைப் பகிரங்கப்படுத்திக் கொண்டிருப்பதில் யாருக்கு என்ன நன்மை?

## பயன் படாது!

ஸ்ரீ சங்கரராவ் தேவ் புறப்பட்டுப் போவதற்கு முன்னால், பொதுக் கூட்டம் ஒன்றிலும் காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டம் ஒன்றிலும் பேசினார். இரண்டிலும் கொஞ்சம் வேதாந்த தத்துவத்தைக் கலந்து பேசினார். "மந்திரிகளின் மீது குறை சொல்லுவதில் பயன் என்ன? ஜனங்களிடம் உள்ள குறைகள்தானே மந்திரிகளிடமும் பிரதிபலிக்கின்றன?" என்று பொதுக் கூட்டத்தில் சொன்னார். ஒரு மனிதனுடைய இரத்தத்தில் ஏதேனும் கெடுதல் ஏற்பட்டால் அது உடம்பில் ஓர் இடத்தில் சிரங்காகவோ கொப்புளமாகவோ புறப்படுகிறது. "இரத்தத்தில் இருப்பதுதானே கொப்புளமாக வருகிறது?" என்று திருப்தி அடைந்து இருக்க முடியுமா? கொப்புளத்தை ஆபரேஷன் செய்யவும் வேண்டும்; உள்ளுக்கு மருந்து சாப்பிடவும் வேண்டும். அதே மாதிரி மந்திரிமார்களிடம் குறை இருந்தால் அதையும் போக்க வேண்டியதுதான்; ஜனங்களிடம் உள்ள குறையையும் நிவர்த்திக்க வேண்டியதுதான். அடுத்தபடியாக காங்கிரஸ் ஊழியர்களுக்கு ஸ்ரீ சங்கரராவ் தேவ் "மந்திரிகளின் காரியங்களைக் கவனித்துக் கொண்டிராதீர்கள். கிராமங்களுக்குச் சென்று நிர்மாண வேலை செய்யுங்கள்!" என்று கூறியது நல்ல யோசனைதான்; சந்தேகமில்லை. ஆனால் காங்கிரஸ் ஊழியர்கள் எவ்வளவுதான் நிர்மாண வேலையில் ஊக்கம் கொண்டு செய்தாலும் அதையெல்லாம் காங்கிரஸ் மந்திரிகள் செய்யும் சில சிறு தவறுகள் பயன்படாமல் செய்து விடுகின்றன. காங்கிரஸ் மந்திரிகளின் செயல்களினால் பொதுமக்களுக்கு ஏற்படும் வெறுப்பும் கோபமும் கதர் அணிந்து கொண்டிருப்பவர்கள் மீதே இப்போது பாயத் தொடங்கியிருக்கின்றன என்றால், வேறு என்ன சொல்ல வேண்டும்? இந்த நிலைமையில் காங்கிரஸ் ஊழியர்கள் மந்திரிகளின் காரியங்களைக் கவனியாமல் நிர்மாண வேலைகளை உற்சாகமாய்ச் செய்து கொண்டிருப்பதென்பது எப்படிச் சாத்தியமாக முடியும்?

## எழுத்தாளர்களுக்கு

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் தமிழ்த் தொண்டு நாளுக்குநாள் சிறப்படைந்து வருகிறது. இந்த வருஷம் திருவாரூரில் நடந்த தமிழ் விழாவைப்போல் இதுவரை எந்தக் கலை விழாவும் நடந்ததில்லை. ஆனால் அடுத்த வருஷம் கோயமுத்தூரில் நடக்கப் போகும் தமிழ் விழா திருவாரூரை விடச் சிறப்பாக இருக்கக்கூடும். அந்த விழாவில் ஏழு பரிசுகள் அளிக்கப்படவிருக்கின்றன. பரிசுகளுக்குரிய விஷயங்கள்:—(1) கட்டுரை, (2) சிறுகதை, (3) நாவல், (4) நாடகம், (5) சரித்திரம்—பொருளாதாரம்—அரசியல் (6) பௌதிகம்—ரசாயனம் (7) ஆராய்ச்சி (மொழி, நூல், பழைய இலக்கியம்). 1947-1948-ம் ஆண்டுகளில் மேற்படி விஷயங்களைப்



## பார்வைக்கு இரண்டும் ஒரே மாதிரிதான்......
## ஆனால் ஒன்றுக்குப் பெயர் கிடையாது!

தோற்றம் ஒருவரை எவ்வளவோ ஏமாற வைக்கலாம். இரண்டு வாட்சுகளும் பார்ப்பதற்கு ஒன்றுக்கொன்று தாழ்வில்லாமல் தோன்றலாம்! ஆனால் இவைகளின் உழைப்பைக் கவனித்தாலோ பெயருள்ள வாட்சே ஒவ்வொரு தரமும் வெற்றி பெறுகிறது.

சிறந்த வேலைப்பாடும், நம்பகமும், நீடித்த உழைப்பும், அழகிய தோற்றமும், உள்ள வாட்சுகளுக்கு இந்தியாவில் சென்ற 75 ஆண்டுகளுக்கு மேலாக வெஸ்ட் எண்ட் வாட்ச் கம்பெனியார் புகழ் பெற்று விளங்குகிறார்கள். மேற்கண்ட சௌகரியங்களெல்லாம் உங்கள் வெஸ்ட் எண்ட் கெடியாரத்திற்கும் உண்டு. நீங்கள் கொடுக்கும் கிரயத்தையோ பொறுக்கி எடுக்கும் ரகத்தையோ பொருத்ததில்லை.

போதிய ஸ்டாக்குகள் இல்லையெனினும் முடிந்த வரையில் சப்ளை செய்வோம்.

வெஸ்ட் எண்ட் வாட்ச் கோ.,
பம்பாய் & கல்கத்தா

**West End Watch Co.**

BOMBAY CALCUTTA

பாக்கெட் வாட்ச்
ஜெண்டீல் நிக்கல்
ரூ. 80/-ரோல்ட்
கோல்டு.112/-






# பொருளடக்கம்

மலர் 8 | இதழ் 48 | ஜூன் 26 | விரோதி ஆனி 13உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.

. . . AFTER THAT I'M CONVINCED

*Tussanol*

IS THE

ONLY WAY



பரீட்சைகள் செய்வது நேரத்துக்கும் பணத்துக்கும் வீண் செலவுதான். எப்போதுமே நிச்சயமாக குணத்தை யளிக்கும் "டஸனல்" உபயோகித்து ஜலதோஷம் இருமலினின்றும் மிக எளிதில் சௌகரியமடைந்த அநேகம் பேர்களின் புத்திமதியையே நீங்களும் மேற்கொள்ளுங்கள்.




# TUSSANOL

*for* COUGHS

MARTIN & HARRIS LTD., CALCUTTA

திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்தது! கடைசி வரை அசையாது உட்கார்ந்து ஆவலுடன் கண்டு களிக்கச் செய்யும் ஓர் இணையிலா உன்னத சித்திரம்!

நம் நாட்டின் ஒரு கதை



டைரக்ஷன்:
வி. சாந்தாராம்

# நம் நாடு
(தமிழ்)

★

# அப்னாதேஷ்
(ஹிந்தி-தெலுங்கு பாட்டுக்களுடன்)

# அப்னாதேஷ்
(ஹிந்தி)

மாகாணம் முழுதும்
ஜூலை மாத ஆரம்பத்தில்
திரையிடப்படும்!

★

புஷ்பா ஹன்ஸ் (புது நட்சத்திரம்)
உமேஷ் சர்மா ★ மன்மோஹன்
கேசவ்ராவ் டேட் ★ வினோதேவி
நடித்தது

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
**அலங்கார் சித்ரா லிமிடெட்**
7, கெம்பகௌடா ரோடு : பெங்களூர்
தந்தி: "ALANKAR"] — [போன்: 2663
கேரளத்திற்கு:
**பாரமவுண்டு பிக்சர்ஸ், எர்ணாகுளம்**

# சென்னையில் ஏவிஎம் ஸ்டூடியோ

ரசிகர்களுக்கு
எங்கள்
காணிக்கை

விரைவில் வருகிறது
## வாழ்க்கை
வாழ்க்கைச் சித்திரம்
வசனம்: ப. நீலகண்டன்

சமூகக் கதையில் ஒரு புரட்சி
## ஓர் இரவு
கற்பனை ஓவியம்
கதை: வசனம்:
C.N. அண்ணாத்துரை M.A

மகோன்னதத் தயாரிப்பு
பரம்மாண்டமான காட்சிகளுடனும்
நட்சத்திர நடிகர்களுடனும்
## புலங்கிரன்
கர்ண பரம்பரைக் கதை
திரைக்கதை: எம். வி. ராமன் - ப. நீலகண்டன்
வசனம்: ப. நீலகண்டன்

AVM
புரொடக்ஷன்ஸ்
சென்னை - 24



பழையதோ அல்லது புதியதோ

உங்கள் காருக்கு



உயர்தரமானது மிகவும் முக்கியம்

வற்புறுத்திக் கேளுங்கள்



# Firestone

பயர்ஸ்டோன்

'கம்-டிப்பிடு டயர்கள்'

யிருந்தாள். நேரே ஆபீஸிலிருந்து வந்த பாண்டுரங்கன், "சரோ! அந்தப் பழத்தைக் கொடம்மா, நான் உரித்துத் தருகிறேன், உனக்குத் தெரியாது!" என்றான்.

அவளுக்குக் கோபம் வந்தது ஆயினும் ஒன்றும் செய்ய முடியாதவளாய்ப் பழத்தைக் கீழே வைத்துவிட்டு, அறைக்கு வெளியே போய்விட்டாள்.

பத்மா மெல்லிய குரலில், "அவளையே உரிக்க விடக்கூடாதா? ஏற்கெனவே உங்களை அவளுக்குப் பிடிக்கவில்லை......" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

"பத்மா, எனக்குக் கிடைப்பது கொஞ்ச நேர ஓய்வுதான்! அதை உனக்காகச் செலவிடுவது உனக்கு இஷ்டமில்லையா...?" என்று கூறி சிரித்தினான் பாண்டுரங்கன். பத்மா பதில் ஒன்றும் சொல்லவில்லை.

அதற்கு மூன்றாம் நாள்தான் பாண்டுரங்கனுக்கு அவசரமாகப் 'போ'னில் செய்தி வந்தது.

## 3

மணி ஐந்தடித்தது. 'டைப் ரைட்ட'ரை மூடி வைத்துவிட்டு, நேரே ஆஸ்பத்திரியை நோக்கி ஓடினான் பாண்டுரங்கன். 'பஸ்' எவ்வளவோ வேகமாகத்தான் ஓடிற்று. ஆனால் அவனுடைய மனம் எப்பொழுதோ பத்மாவை அடைந்து விட்டது.

ஆஸ்பத்திரி வாசற்கதவைத் தாண்டி அவசர அவசரமாக அவன் கால்கள் 'காந்தி வார்டை' நோக்கி ஓடின. அந்த 'வார்டி'ல்தான் பத்மா விடப்பட்டிருந்தாள். 'இதற்குள் என்ன ஆகியிருக்குமோ!' என்று அவன் இதயம் படபட வென்று அடித்துக் கொண்டிருந்தது.

அவனை நோக்கிப் பெரிய பெரிய தூண்கள் பறந்து வந்தன. அதாவது அவன் தூண்களைக் கடந்து வேகமாகப் பெரிய 'ஹா'லைத் தாண்டிச் சென்றான்.

கடைசியில் அவன் எதிர்நோக்கி வந்த 'வார்டு' நெருங்கியது. வெளியில் கவலை தோய்ந்த முகத்துடன் செல்லம்மாளும், சரோஜாவும் நின்று கொண்டிருந்தார்கள். பாண்டுரங்கனைப் பார்த்ததும் செல்லம்மாள் ஓடி வந்து அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு, "வந்தாயா? ஏன் காலையிலேயே வரவில்லை? 'போன்' செய்தேனே?" என்றாள்.

"காலையில் கூடவா 'போன்' செய்தீர்கள்?" என்று கேட்டான் அவன்.

"சரோதான் இரண்டு வேளையும் 'போன்' செய்தாள்!" என்றாள் அவள்.

ரங்கன் சரோவை உற்றுப் பார்த்தான். அவள் தலை குனிந்து நின்றாள்.

செல்லம்மாள், "ரங்கா, பத்மாவின் தேகத்தில் ரத்தமே கிடையாதாம். டாக்டர் அவளுக்கு யாராவது ரத்தம் கொடுக்க வேண்டுமென்கிறார். காலையில் நான் என்னுடைய ரத்தத்தைக் கொடுக்கத் தயாராக இருந்தேன். ஆனால் அது சரிப்படாதாம். சரோ பயப்படுகிறாள்......'மாட்டேன்' என்றும் சொல்லிவிட்டாள்!" என்று மேலே கூறமுடியாமல் மென்று விழுங்கினாள்.

"அவ்வளவுதானே!" என்று ரங்கன் கூறிவிட்டு, டாக்டரை நோக்கி விரைந்தான். சரோ வியப்புடன் அவன் போவதைப் பார்த்துக்கொண்டே நின்றாள். செல்லம்மாளும் விழித்தவாறு அங்கேயே நின்று விட்டாள்.

பதினைந்து நிமிஷம் சென்று மலர்ந்த முகத்துடன் பாண்டுரங்கன் அங்கே வந்தான். "என் ரத்தம் சரியாயிருக்கிறதாம்; தேவையானது கொடுத்துவிட்டேன். இனிமேல் பயமில்லை; பத்மா எழுந்து விடுவாள்!" என்று உற்சாகத்துடன் கூறினான்.



பிள்ளை:—அம்மா! உன் பேரனை வக்கீலுக்குப் படிக்க வைக்கலாம்னு இருக்கேன். அதுக்கு இவன் எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் பண்ணி, இண்டர் படிச்சு, பி.ஏ. படிச்சு அப்புறமா வக்கீல் பள்ளிக்கூடத்திலே சேர்க்கணும்!

தாயார்:—ஏண்டாப்பா! என்னைச் சுத்தி வளைச்சுப் பிடிக்கிறே! சிவனேன்னு நேரே வக்கீல் பள்ளிக்கூடத்திலேயே கொண்டு சேர்த்து விடேண்டா!

"ரங்கா!" என்று கூவியவாறு அவன் கைகளைப் பற்றிக் கண்ணீர் உகுத்தாள் செல்லம்மாள்.

• • •

மறுநாள் காலை வழக்கம்போல் ரங்கன் 'டப்...டிப்... டப்...டிபிங்' என்று தன் வேலையில் கவனமாக இருந்தான்.

பத்து நிமிஷங்கள், அரை மணி, முக்கால் மணி...... அவ்வளவுதான்! முதல் நாள் ரத்தம் ஈந்த கரம் வலியினால் துடித்தது. கண்கள் மெல்ல மெல்லச் சுழன்று செருகிக் கொண்டு போயின. மூன்று நாட்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும் என்று டாக்டர் கூறியதை அனுசரிக்காமல் அவன் மானேஜருக்குப் பயந்து வேலை செய்யத் தொடங்கினான். அவன் உடல் கேட்கிறதா? தன்னையுமறியாமல் 'டைப் ரைட்டர்' மீதே அவன் மயங்கி விழுந்துவிட்டான். அந்தப் பக்கம் வந்த மானேஜர், அவன் இருந்த நிலையைக் கண்டு, "ஆபீஸில் தூங்குவதாவது!" என்று கர்ஜித்துவிட்டுச் சென்றார்.

பாண்டுரங்கன் மயக்க நிலையிலிருந்து எழுந்தபோது அவன் கையில் 'வேலை நீக்க உத்தர'வை வேலைக்காரன் கொடுத்தான்.

தன்னுடைய உண்மை நிலையை மானேஜரிடம் எடுத்துச் சொல்லலாம் என்று ரங்கன் எண்ணுவதற்குள் மறுபடியும் மயக்கம் வந்து விட்டது. நல்ல அடியும் பட்டு விடவே, அவன் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு மெதுவாகக் கண்களைத் திறந்தபோது, பாண்டுரங்கன் தன் அருகில் கண்ணீருடன் செல்லம்மாள் உட்கார்ந்திருப்பதைக் கண்டான்.

"தம்பி! உடம்பு எப்படியிருக்கிறது?" என்று கனிவுடன் விசாரித்தாள் செல்லம்மாள். அவனால் முதலில் பேச முடியவில்லை.

அதற்குள் அந்தப் பக்கம் வந்த டாக்டர், "அம்மா! நோயாளி அதிகம் பேசி உடம்பை அலட்டிக் கொள்ளக் கூடாது. இப்படி வந்து விடுங்கள்!" என்று கூறி விட்டுச் சென்றார்.

"சரி டாக்டர்!" என்று கூறிய செல்லம்மாள் அவனைப் பார்த்தவாறு பிரமை பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள்.

பாண்டுரங்கன் வாயைத் திறந்து, "பத்மாவுக்கு எப்படியிருக்கிறது?" என்று தடுமாறிக் கொண்டே கேட்டான்.

"அவளுக்குப் பரவாயில்லை; உன்னுடைய புண்ணியத்தினால் அவள் பிழைத்தெழுந்து விட்டாள் நீ அதிகம் பேசாதே!" என்றாள் அவள்.

"நான் என்ன பிரமாதமாகச் செய்து விட்டேன்? என் ஒரு தங்கையைத்தான் இழந்து விட்டேன்; இந்தத் தங்கையையும் இழந்துவிட முடியுமா?" என்றான் பாண்டுரங்கன்.

செல்லம்மாளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவள் அவனை நன்றியறிதலுடன் பார்த்தாள். பிறகு நீர் மல்கிய கண்களுடன் தனக்கு அருகே நின்றுகொண்டிருந்த சரோஜாவைப் பார்த்தாள். அவ்வளவுதான்; சரோஜாவின் கண்களிலும் நீர் ததும்பி வழிந்தது.






# குழந்தை வைத்தியர்

**விஜயம்**

**ம**ணி ரொம்ப புத்திசாலிப் பையன். எல்லாருடனும் சிரித்துக் கொண்டு எப்போதும் ஏதாவது வேடிக்கையாகப் பேசுவான். அவனுக்கு ஒரு வாரமாய்க் கடும் ஜுரம். தன் நினைவே அவனுக்கு இல்லை. தனக்குத் தானே ஏதேதோ பேசுவதும் சிரிப்பதுமா யிருந்தான். மணியின் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் ரொம்பக் கவலையாய்ப் போய்விட்டது.

“டாக்டர் தைரியமாகத்தானே சொல்லுகிறார்? எனக்கு ரொம்ப பயமா யிருக்கிறது!” என்றாள் மணியின் அம்மா. அவள் கண்களில் நீர் பெருகியது.

“அவன் ஏதாவது ஆகாரம் சாப்பிட்டால்தான் உடம்பு குணமாவதைப் பற்றிச் சொல்ல முடியும் என்கிறார் டாக்டர். அவன்தான் ஆகாரமே வேண்டாம் என்கிறானே!” என்றார் அப்பா. அவர் முகத்திலும் கவலை தேங்கி யிருந்தது.

“அம்மா, அம்மா!” என்றான் மணி.

“என்னடா, என் கண்மணி! கொஞ்சம் கஞ்சி சாப்பிடுகிறாயா? சர்க்கரை போட்டு நல்ல கஞ்சியாக வைத்திருக்கிறேன்!” என்றாள் அம்மா.

“எனக்குக் கஞ்சியும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். பூம்! பூம்!” என்று சொல்லியபடி அவன் அழுதான். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் ஒன்றும் விளங்கவில்லை. ஒரு வேளை ஜன்னிக் கோளாறில் பிதற்றுகிறானோ என்று அவர்களுக்குப் பயமாய்ப் போய்விட்டது.

என்னென்னவோ சொல்லிப் பார்த்தும் அவன் துளிக் கஞ்சி கூடச் சாப்பிடவில்லை. “பூம் பூம் வேண்டும்” என்று விடாமல் சொல்லி அழுது கொண்டிருந்தான். அம்மாவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. துக்கம் தாங்க முடியாமற் போகவே அவள் அழ ஆரம்பித்து விட்டாள்.

அப்பாவும் என்ன செய்வதென்று புரியாமல் உட்கார்ந்துகொண்டிருந்தார். அப்பொழுது சடாரென்று அவருக்கு ஒரு யோசனை உதித்தது.

“குழந்தையைக் கொஞ்சம் பார்த்துக் கொள். இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறேன்!” என்று அம்மாவிடம் சொல்லிவிட்டு அப்பா பரபரவென்று வெளியே சென்றார். அவர்கள் வீட்டுக்குச் சமீபத்தில் இருந்த மைதானத்தில் ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்திருந்தது. அந்தச் சர்க்கஸ் கம்பெனி மானேஜரிடம் அப்பா அவசரம் அவசரமாகப் போனார்.

“ஸார், உங்கள் கம்பெனியில் கோமாளி வேஷம் போட்டுக் கொள்ளும் நடிகரைக் கொஞ்சம் அவசரமாகப் பார்க்க வேண்டும்!” என்றார்.

உடனே கம்பெனி மானேஜர் ஒரு சீட்டு எழுதி அவரிடம் கொடுத்து அவரை உள்ளே அனுப்பினார். உள்ளே யிருந்த ஒருவர் அந்தச் சீட்டை வாங்கிப் பார்த்தார்.

“நான்தான் அந்தக் கோமாளி. உங்களுக்கு என்ன வேண்டும்?” என்று கேட்டார்.

அப்பா தயங்கியபடியே, “என் குழந்தை மணிக்கு விடாமல் ஜுரம் அடிக்கிறது. என்ன மருந்து கொடுத்தும் பயன் இல்லை. ஆகாரம் ஒன்றும் சாப்பிட மாட்டேன் என்கிறான்.

நீங்கள் ஓர் உபகாரம் செய்ய வேண்டும். சர்க்கஸில், உங்கள் கோமாளி நடிப்பைப் பார்த்திலிருந்து 'பூம்! பூம்!' என்று சொல்லி உங்கள் மாதிரியே நடித்து விளையாடிக் கொண்டிருந்தான். இப்பொழுது ஜுர வேகத்திலும் 'பூம்! பூம்!' என்று சொல்லிப் பிதற்றுகிறான். டாக்டர், அவன் மனத்திலுள்ளதை அறிந்து அவன் விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்கிறார். நீங்கள் தயவு செய்து குழந்தையைப் பார்த்துவிட்டுப் போக வேண்டும்!'' என்று அப்பா, துக்கத்தினால் குரல் நடுங்கக் கூறினார். மறு வார்த்தை பேசாமல் கோமாளி அப்பாவுடன் புறப்பட்டுவிட்டார்.

"மணி, கண்ணைத் திறந்து பார்! யார் வந்திருக்கிறார்? சர்க்கஸில் வேடிக்கையெல்லாம் செய்தாரே, 'பூம்! பூம்!' மாமா, அவர் வந்திருக்கிறார்!'' என்றார் அப்பா.

மணி கண்ணைத் திறந்து சர்க்கஸ் கோமாளியைப் பார்த்தான்.

"இவர் வேறு யாரோ! என்னை நீ ஏமாற்றுகிறாய், அப்பா!'' என்று சொல்லி இன்னும் பலமாக அழ ஆரம்பித்து விட்டான் மணி.

"இதோ வந்துவிட்டேன்!'' என்று சொல்லி விட்டு, சர்க்கஸ் கோமாளி வேகமாகத் தம் கூடாரத்துக்குப் போனார். கால் மணி நேரத்துக்கெல்லாம் அவர் மீண்டும் மணியின் எதிரே வந்து நின்றார். மணி ஆனந்தத்துடன் 'ஹஹ்ஹஹ் ஹா' என்று சிரித்துக்கொண்டே எழுந்து உட்கார்ந்தான்.

அந்த மனிதர் கூடாரத்துக்குப் போய்த் தாம் தினந்தோறும் சர்க்கஸில் அணிந்து கொள்ளும் தசாவதார வர்ண உடையையும் கோமாளித் தொப்பியையும் அணிந்து கொண்டு முகத்தில் பவுடர் போட்டுக் கொண்டு வந்திருந்தார். நிஜக் கோமாளியைப் பார்த்ததும் மணியின் ஜுரம் பறந்தோடி விட்டது. அப்பொழுது மணியைப் பரிசோதித்த டாக்டர் ஆச்சரியமடைந்தார்.

"டாக்டர் ஸார், என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் வேலையை நான் எடுத்துக் கொண்டு விட்டேன்!'' என்றார் கோமாளி.

"இல்லை, இல்லை. இது என் வேலை அல்ல. மருந்துதான் என்னால் தர முடியும். மன உற்சாகத்தையும் சந்தோஷத்தையும் தர என்னால் முடியாது. உண்மையிலேயே நீங்கள் ஒரு குழந்தை வைத்தியர்தான்!'' என்று சொல்லி டாக்டர் சிரித்தார்.

மணியின் தகப்பனார் ஆனந்தத்துடன் சர்க்கஸ் கோமாளியைப் பார்த்து, "என் குழந்தையைப் பிழைக்க வைத்த தங்களுக்கு நான் என்ன கொடுக்கப் போகிறேன்!'' என்று சொல்லி மேலே பேச முடியாமல் தவித்தார்.

"எனக்கு நீங்கள் ஒன்றும் தர வேண்டாம். காலேஜில் படிக்காமல், பரீக்ஷை பாஸ் பண்ணாமல் எனக்குக் 'குழந்தை வைத்தியர்' என்ற பட்டம் கிடைத்ததே, அது போதும். அதற்குக் காரணம் மணிதானே? நான்தான் அவனுக்கு ஏதாவது தர வேண்டும். இனிமேல் அவன் சர்க்கஸ் பார்ப்பதற்குக் காசு கொடுத்து டிக்கெட் வாங்க வேண்டாம். சர்க்கஸ் கேட்டில் அவனை யாரும் உள்ளே விட்டுவிடுவார்கள். சொல்லி வைத்து விடுகிறேன்!'' என்றார் சர்க்கஸ் கோமாளி. மணியின் சந்தோஷத்துக்குக் கேட்கவேண்டுமா?






"மூன்று மாதங்களுக்கு உனக்கு சஸ்பெண்ட்!" என்று சொல்லிக் கையில் உத்தரவைக் கொடுத்தபோது 308-ம் நம்பர் கான்ஸ்டபிள் சிவானந்தத்துக்கு எப்படியிருக்கும்?

பதினைந்து வருஷங்களுக்கு மேலாக அப்பழுக்கில்லாமல் போலீஸ் இலாகாவில் அவன் உத்தியோகம் பார்த்தாகி விட்டது. ஒரு நாளும் ஏற்பட்டிராத இந்தப் பெரிய தாக்குதல் அவன் மீது இப்போது சுமத்தப்பட்டது. புதிதாக வந்த போலீஸ் சார்ஜண்டு துரையைச் சரியாகக் 'காக்காய்' பிடிக்காத தோஷம் இவனுக்கு இத்தகைய தண்டனை! வேறு ஒரு குற்றமுமில்லை. பாவம்! பிள்ளை குட்டிக்காரன்; உத்தியோகத்தை விட்டால் வேறு கதியில்லை—இதையெல்லாம் யார் கேட்கிறார்கள்?

இதே ஏக்கத்துடன் படுத்தவன்தான் சிவானந்தம். ஒரு மாதமாக வீட்டின் இருப்பே அவனுக்குத் தெரியாது. இன்னும் இரண்டு மாத காலம் செல்லவேண்டும். கடந்த நான்கு தினங்களாகத்தான் வீட்டின் சூழ்நிலையை அவன் அறிய முடிந்தது. அவன் பெண்சாதிக்கும் குழந்தைக்கும் வேறு காய்ச்சல். வீட்டில் ஒரு பண்டமும் இல்லை. கடன்காரர்களின் தொல்லை வேறு.

யோசித்து யோசித்துச் சிவானந்தத்தின் மூளையே குழம்பி விட்டது. ஏதோ ஒரு குருட்டுச் சபலத்துடன் போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தான். ஆனால், அங்கேயும் அவனது துரதிருஷ்டம்—அந்த வேட்டை நாய் துரை தன்னுடைய குணத்திற்கேற்றபடியே நடந்துகொண்டார்.

சிவானந்தம் கால் கடுக்க அலைந்ததுதான் மிச்சம். விதியை நினைத்துக் கொண்டு திரும்பினான். ஆனால், அவனது சகா சொன்ன ஒரு விஷயம் அவனுக்குச் சற்று வியப்பாகவே இருந்தது. ஊரில் 'கள்ள மார்க்கெட்டு' விஷயங்கள் மலிந்து கிடப்பதாகவும் அவற்றைக் கண்டு பிடிப்பதில் போலீஸ் இலாகா சரியாக வேலை செய்யவில்லையென்றும், அது சம்பந்தமாக சார்ஜண்டு துரையின் உத்தியோகத்திற்கே ஆபத்து வந்துவிடும்போலிருப்பதாகவும் அவன் தெரிவித்தான். இந்தச் செய்தி சிவானந்தத்துக்குச் சற்று மகிழ்ச்சியைக் கொடுத்தது என்றாலும் அவனது பழைமையான குணம்தான் அதற்கு முன்னால் நின்றது.

2

அன்றிரவு இரண்டு ஆத்மாக்களுக்கு உறக்கமில்லை. ஒன்று சிவானந்தம்; மற்றொருவர் சார்ஜண்டு துரை!

சார்ஜண்டு உறக்கம் பிடிக்காமல் கூண்டுப் புலிபோல் உலாவிக் கொண்டிருந்தார். காரணம் அவருக்கு மாத்திரமா தெரியும்? ஊரே அறிந்ததுதானே?—அவர் குடித்துப் போட்டிருந்த சிகரெட்டின் சாம்பல் அவரையே பயமுறுத்திக் கொண்டிருந்தது!

சிவானந்தத்தின் பசியும், மனநோயும் அவனைத் தூங்க விடவில்லை. குழந்தை வேறு தன் வயிற்றில் கஞ்சியில்லாக் குறையை அடிக்கடி அம்பலப்படுத்திக் கொண்டேயிருந்தது.

அவனுடைய சூழ்நிலை ஒரு கோடியில் அவனைக் கொடியவனாக்கிவிட்டது. மேல் துண்டை உதறிப் போட்டுக்கொண்டு அவன் வெளியே கிளம்பியபொழுது ஏறக் குறைய முப்பது வருஷத்திய நாணயமும் கௌரவமும் அவனிடமிருந்து விடை பெற்றுக்கொண்டன!

எங்கேயோ ஒரு வீட்டின் கடிகாரம் ஒன்றடித்தபோது, மணி பன்னிரண்டரை என்று கணித்துக்கொண்டான் சிவானந்தம். அவன் கால்கள் தாவிக் கொண்டிருந்தன. கடலங்குடித் தெருவில் ஒரு பெரிய வீட்டின் கைப்பிடிச் சுவர் அவனது கவனத்தைக் கவர்ந்தது. அப்புறம் — இரண்டே தாவில் அதன் உட்புறம் குதித்தான் அவன்!

சிவானந்தம் எதிர்பார்த்தபடிதான் இருந்தது; கோடி அறையைத் திறந்து அதற்குள் பிரவேசித்தபோது அவனுக்குச் சற்று வியப்பாகத்தானிருந்தது. ஒன்றுமில்லாத ஒரு அறைக்கு அவ்வளவு பெரிய பூட்டுப் போடுவதின் காரணம்?

அதுவும் விளங்குவதற்கு அவனுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை. ஏதோ ஒரு இடைஞ்சலான மரப்படியில் அவன் காலை வைத்ததுமே அது முறிந்து அவனை உள்ளுக் கிழுத்துக்கொண்டது!

இது என்ன அறை? முப்பது வருஷங்களாகக் காணாதவனுக்கு இது ஒரு அதிசயந்தான்!

சிவானந்தம் தடுமாறிக்கொண்டே சுவரைத் துழாவியபொழுது அவன் இதயமே அவனிடம் இல்லை. ஆனால் மின்சார விசையொன்று அவன் கையில் அகப்பட்டுக் கொண்டது.

ஆச்சரியந்தான்! அவன் வீட்டிலும், அவன் பழகின வீடுகளிலும் ஒரு பிடி அரிசி இல்லை; ஒரு தேக்கரண்டி சர்க்கரை இல்லை. ஆனால், இந்த அறையிலுள்ளவற்றைக் கணக்கிடுவதற்குக் குறைந்த பட்சம் ஒரு நாளாவது பிடிக்குமே!

சிவானந்தம் அதற்குமேல் அதிகமாகத் தயங்கவில்லை. இருதய வேகத்திற்கு மேல் அவனது கை கால்கள் பரபரப்படைந்தன.

துண்டை விரித்துப் போட்டுக் கொஞ்சம் அரிசியை எடுத்து முடிந்து கொண்டான்; மற்றொரு தலைப்பில் குழந்தைக்காகக் கொஞ்சம் சர்க்கரையும் எடுத்துக் கொண்டான். அவன் விரும்பியது அவ்வளவேதான்!

அப்பொழுதுதான் அந்த அதிசயமும் நிகழ்ந்தது. தன்னைப்போல் இன்னொரு ஆத்மாவும் வெகு நாஜூகையாக உறங்காமல் இருந்தது அப்பொழுதுதானே அவனுக்கு விளங்கிற்று!

ஆனால், அந்த நிமிஷம் அவன் எதிர்பார்த்தபடி ஒன்றும் ஆபத்து நிகழவில்லை. அதற்கு நேர்மாறாகக் கணபதி செட்டியார் சர்வாங்கமும் வியர்த்துப் பேயறைந்ததுபோல் நின்றுகொண்டிருந்தார். அவர் சத்தமிடவுமில்லை; பலாத்காரம் செய்யவுமில்லை. அதற்குப் பதிலாக, அவன் பெயரைச் சொல்லிக் கொண்டே அவனது கரங்களைப் பற்றிக் கொண்டார்—நடுக்கத்துடன்தான்!

மறுகணம் சிவானந்தத்தின் முன்பு அநேக பச்சை நோட்டுக்களுடன் கெஞ்சிக் கொண்டே நின்றார் செட்டியார்!

அசந்தர்ப்பமான இந்த நிலையில் சிவானந்தத்தின் இதயத்தில் பெரும் போராட்டம், ஒரு பூகம்ப சுழற்சி—தரித்திரமும் ஏழ்மையும் நிறைந்த அவனது குடும்பம்; ரேஷன் கடை வாசல்களில் ஒட்டிய வயிற்றுடன் நிற்கும் கும்பல்கள்; அதற்கும் மேலாக தனது முப்பது வருஷத்திய உத்தியோகத்தில் தான் செய்த கடமை—எல்லாமே அவன் மனக் கண் முன் சுழன்று கொண்டிருந்தது!

தன்னுடைய முப்பது வருஷத்திய சிந்தனைகளையும் மூன்று நிமிஷங்களில் முடித்துக் கொண்டு அவன் செட்டியாரை நோக்கியபொழுது—எதிரிலிருந்த 'பச்சை நோட்டுக்கள்' அவனது ஆதரவுக்காகக் கெஞ்சிக் கொண்டிருந்தன!



"இந்தச் சன்மானம் எதற்கு?" என்று சிவானந்தத்தின் மூளை குழம்பிற்று. முன்னும் பின்னும் சுழன்று சுழன்று அவன் மனம் போராடிற்று. அடுத்த கணம் அவனது கால்கள் ஆவேசம் கொண்டுவிட்டன! ஆமாம் — அவனது ஆயுளிலேயே அவன் அவ்வளவு ஓட்டம் ஓடினதில்லை. அவனது வெற்றுத் துண்டு அவன் சிரசில் முண்டாசாகத்தானிருந்தது!

3

சிவானந்தம் சொன்ன விஷயத்தைக் கேட்டதும் சார்ஜண்டு துரைக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. அந்த அர்த்த ராத்திரியிலேயே செட்டியாரின் சுரங்கத்திற்குள் நுழைந்த பின்னரும் அவருக்கு என்ன சொல்வது, என்ன செய்வது என்று விளங்கவில்லை! ஆனால் குழிந்த கண்களும், ஒட்டிய கன்னமும் உடைய 'அந்த சொரூபம்' கலியுகத்துக்கே புறம்பானவன் என்பது மாத்திரம் அவரது இதயத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது!

சிவானந்தத்தின் கடமை எவ்வளவோ ஜீவன்களின் உயிரைக் காப்பாற்றியதை எண்ணியபோது — சார்ஜண்டின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் கீழே விழுந்தது!

அதே கணம் அரைப் படி அரிசிக்காக —சார்ஜண்டின் முகத்தையே ஏக்கத்துடன் பார்த்துக்கொண்டு நின்றான் சிவானந்தம் — மகிழ்ச்சியும் திருப்தியும் அடைந்த உள்ளத்துடன்தான்!

# காலக்ஷேபம்

## பணம் வேண்டாம்!

மளிகைக் கடைக்காரர் (நாட்டு வைத்தியரிடம் கோபத்துடன்):—ஐயா, உங்கள் வீட்டுக்குப் பணத்துக்காக நடந்து நடந்து என் கால் ஒடிந்து போய்விட்டது......

நாட்டு வைத்தியர்:—உங்களுக்கு எந்தக் கால் ஒடிந்து போயிற்று? அதைக் காட்டுங்கள்; பச்சிலை வைத்துக் கட்டுகிறேன்.

★

## சபாஷ்!

குப்பு:—நான் பிறத்தியார் மாதிரி இல்லை. ஏதாவது அசட்டுத்தனமாகக் காரியம் செய்துவிட்டால் நானே சிரித்து விடுவேன்.

சுப்பு:—ஓஹோ! அதனால்தான் எப்போதும் நீங்கள் சிரித்த முகமாக இருக்கிறீர்கள்!

★

## ஓஹோ!

மனைவி:—இப்பொழுது உங்களுக்கு கல்யாணம் ஆகவில்லையென்று வைத்துக்கொள்ளுங்கள். மறுபடியும் என்னையே கல்யாணம் செய்து கொள்ளுவீர்களா?

கணவன்:—நிச்சயமாக உன்னையே கல்யாணம் செய்து கொள்ளுவேன். இப்படியெல்லாம் என் வாயைக் கிண்டினால் உண்மையைத் தெரிந்துகொண்டு விடலாம் என்று நினைக்காதே!

## கலகம் சரி!

நண்பர்:—என் ஸார், என்ன சமாசாரம்? ஒரு மாதிரியாய் இருக்கிறீர்களே?

மற்றவர்:—அடுத்த சினிமாப் படத்துக்குப் பாட்டு எழுதி வைத்திருந்தேன். அதை என்னுடைய பேரன் அடுப்பிலே போட்டுவிட்டான்!

நண்பர்:—இப்பொழுதுதான் உங்கள் பேரன் வாசிக்கக் கற்றுக் கொண்டான் போலிருக்கிறது!

★

## சமர்த்து!

அப்பா:—ஏண்டா, பத்து பலம் பேரீச்சம் பழத்தையும் சினிமா பார்ப்பதற்குள் தின்று விட்டாயே! கொட்டைகளையெல்லாம் கீழே தானே துப்பினாய்?

பையன்:—இல்லை, அப்பா! பக்கத்தில் ஒருவர் தொப்பியை வைத்திருந்தார். அதற்குள் போட்டுவிட்டேன் எல்லாக் கொட்டைகளையும்!

★

## இரவல் எதற்கு?

பக்கத்து வீட்டு நண்பர்:—உன்னுடைய கிராமபோன் பெட்டியை இன்று சாயங்காலம் இரவல் கொடுக்க முடியுமா?

மற்றவர்:—ஏன், யாராவது சிநேகிதர்கள் வரப்போகிறார்களா?

நண்பர்:—இல்லை, ஒரு நாளைக்காவது நிம்மதியாக இருக்கலாம் என்று பார்த்தேன்!

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை
# பருகுங்கள்

விளையாட்டுக் காரருக்கும் சரி, புலவரினருக்கும்சரி, போர்ன்-வீடா அதிக வன்மையும் அதிக புஷ்டியும் அளிக்கும் அதனால் அதிகசக்தியும்பெறுகின்றனர். குழந்தைகள் அதன் சாக்லேட் வாசனையை விரும்புகின்றனர். காலையிலும் மாலையிலும் ஒரு கிளாஸ் சூடான அல்லது குளிர்ந்த பாலில் இரண்டு தேக் கரண்டியளவு கலந்து பருகவும்.







- ஆரோக்கிய விருக்ஷம் -

புதியதாக குறைக்கப்பட்ட விலையைப் பற்றி கேட்கவும்



சூடான

அல்லது

குளிர்ந்த



CFY-I TAM

## கேட்பரீஸ்
## போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

கட்பரீ - ப்ரை (இந்தியா) லிமிடெட்

தபால் பெட்டி நெ. 1417 பம்பாய் [illegible] 1725 [illegible]

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 257. இது என்ன கூப்பாடு?

ராவணனிடம் விபீஷணன் எவ்வளவோ பரிந்து பேசிப் பார்த்தான்.

"அரக்க குலம் அழிந்து விடுமே" என்ற ஆற்ருமையிற் பேசினன். "என் பிழை ஏதேனும் உண்டானல் பொறுத்தருள்வாயாக!" என்று பணிந்து பேசினன்.

ஒன்றிலும் பிரயோசனம் இல்லை என்று கண்டு இலங்கையை விட்டுப் புறப்பட்டு விட்டான் விபீஷணன்.

அவனுடன் நல்ல அறிவாளிகளான நால்வர்—அனலன், அனிலன், அரன், சம்பாதி ஆகிய நால்வர்—புறப்பட்டார்கள். கடலைக் கடந்து ராமனது பட்டாளம் இருந்த பாசறைக்கு வெளியே வந்து சேர்ந்தார்கள்.

விபீஷணனை வானர சேனையில் சிலர் பார்த்துக் கொண்டார்கள். அரக்கன் வந்து அகப்பட்டுக் கொண்டான் என்று ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்தார்கள்.

முற்றிய குரிசிலை
　　முழங்கு தானையர்
'உற்றனர் நிருதர்வந்து'
　　என்ன ஒன்றினர்;
'எற்றுதிர் பற்றுதிர்
　　எறிதிர்' என்றிடை
சுற்றினர் உரும்எனத்
　　தெழிக்கும் சொல்லினர்.

[முற்றிய குரிசிலை: வந்து சேர்ந்த விபீஷணனை: முழங்கு தானையர்: 'ஆ! ஹோ!' என்று சத்தம் போட்ட வானர சேனைகள்: உற்றனர் நிருதர் வந்து என்ன ஒன்றினர்: வந்து அகப்பட்டு விட்டார்கள் அரக்கர்கள் என்று மொய்த்தார்கள்: எற்றுதிர் பற்றுதிர் எறிதிர் என்று: உதையுங்கள், கட்டிப் பிடியுங்கள், அடியுங்கள் என்பதாக: இடை சுற்றினர்: மத்தியில் சிலர் வந்து புகுந்து விபீஷணனைச் சுற்றிக் கொண்டார்கள்—யார்? உரும் எனத் தெழிக்கும் சொல்லினர்: இடி போல அதட்டு அதட்டிப் பேசியவர்களான வானரர் சிலர்.

குறிப்பு:—ஒரு நாடகக் காட்சிக்கு நம்மைக் கொண்டு போகிறது செய்யுள். ஜம்மான காட்சி.]

திடீரென்று அரக்க உருவத்தைப் பார்த்ததும் பிரமித்துப் போய்விட்டனர் வானரர்கள். ராவணனே வந்து விட்டதாக முதலில் எண்ணுகிருர்கள்.

இருபது கரம், தலை
　　ஈரைந்(து) என்னும்அத்
திருவிலிக்(கு) அன்னவை
　　சிதைந்த வோஎன்பார்,
பொருதொழில் எம்மொடும்
　　பொருதி போர்என்பார்,
ஒருவரின் ஒருவர்சென்(று)
　　உறுக்கி ஊன்றுவார்.

[இருபது கரம், தலை ஈரைந்து: இருபது கையும் பத்துத் தலையும் அந்த அயோக்கியனுக்குத் (ராவணனுக்குத்) தொலைந்தே போய் விட்டன போலிருக்கிறது என்கிருர்கள்; பொருதொழில் எம்மொடும் பொருதி போர் என்பார்: வேறு சிலர், வாடா சண்டைக்கு எங்களோடு என்று கத்துகிருர்கள்; பொருதொழில்: போர் செய்யும் தொழில்; ஒருவரின் ஒருவர் சென்று: ஒருவருக்கு மேல் ஒருவராக ஓடிவந்து; உறுக்கி ஊன்றுவார்: ஆங்காரத்தோடு தாக்கப் பார்க்கிருர்கள்.]

சில வானரர்கள் "இந்த அரக்கனை இப்படியே பிடித்துச் சிறையில் போட்டுவிட்டு, அந்த விஷயத்தை ராமனிடம் போய்த் தெரிவிப்போம்" என்ருர்கள்.

இதை ஒப்புக் கொள்ளவில்லை சிலர்.

'பற்றினம் சிறையிடை
வைத்துப், பாருடைக்
கொற்றவற்(கு) உணர்த்துதும்'
என்று கூறுவார் ;—

'எற்றுவ தன்றியே,
இவனைக் கண்(டு)இறை
நிற்றல்என் செயல் !'என
நெருக்கி நேர்குவார்.

[பற்றினம் : கட்டிப் பிடித்து ; சிறையிடை வைத்துப் பாருடைக் கொற்றவற்கு உணர்த்துதும் : சிறையில் போட்டு சகல லோக சக்கரவர்த்தியான ராமனுக்குத் தெரிவிப்போம் ; எற்றுவதன்றியே ; உதைப்பதல்லாமல் ; இவனைக் கண்டு இறை நிற்றல் : இந்த அரக்கனைப் பார்த்த பிறகு ஒரு விநாடி கம்மா நிற்கிற காரியமானது ; என் செயல் : என்ன பயித்தியக்கார காரியம் ; என நெருக்கி நேர்குவார் : என்று சொல்லிக் கொண்டு ஒருவரோடு ஒருவர் நெருக்கிக் கொண்டு விபீஷணனை நோக்கி வருகிறார்கள்.]

* * *

இவ்விதமாக மனசுக்குத் தோன்றியபடியெல்லாம் வானரர்கள் கத்திக் கொண்டிருக்கும்போது வானர சேனாதிபதிகளான மயிந்தனும் அவன் தம்பி துமிந்தனும் அனுமனால் ஏவப்பட்டு விஷயம் என்ன என்று விசாரிக்க வருகிறார்கள்.

இயைந்தன இயைந்தன
இனிய கூறலும்
மயிந்தனும் துமிந்தனும்
என்னும் மாண்பினர்
அயிந்திரம் நிறைந்தவன்
ஆணை ஏவலால்,
நயந்தெரி காவலர்
இருவர் நண்ணினர்.

[இயைந்தன இயைந்தன இனிய கூறல் : மனசுக்குத் தோன்றியவாறு மேலே சொன்னபடி சொல்லிக்கொண்டிருக்கும்போது ; மாண்பினர் : உயர்ந்த பண்புடையவர்கள் ; அயிந்திரம் நிறைந்தவன் : புனரிவுக்கு அப்பாலான பரதத்துவ ஞானத்தில் மனசை சதா வைத்துக் கொண்டிருக்கும் அனுமனது ; ஆணை ஏவலால் : கட்டளைப்படி ; நயந்தெரி காவலர் இருவர் நண்ணினர் : விஷயம் என்ன என்று தெரிந்து கொள்வதற்கு இரண்டு காவலர்களும் வந்து சேர்ந்தார்கள்.]

வந்த இருவரும் என்ன செய்கிறார்கள் என்பதைப் பார்க்கலாம்.














# சுதந்திர மாளிகை

ஜெயமணி

[சென்ற மே மாதம் 16-க் தேதியிலிருந்து ஆரம்பமான அரசியல் நிர்ணய மகா சபைக் கூட்டத்தில் இந்திய அரசியல் திட்ட நகலைப் பற்றிய விவாதம் மேற்கொண்டு தொடர்ந்து நடந்து வருகிறது. முந்திய கூட்டத்தில் நிறைவேறிய மேற்படி திட்ட ஷரத்துகள் ஏற்கெனவே இந்த இதழ்களில் தொடர்ச்சியாக வெளி வந்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கலாம். இப்போது நடந்து வரும் கூட்டத்தில் நிறைவேறிய இந்திய அரசியல் திட்ட ஷரத்துகளின் விவரம் பின்வருமாறு:]

## 7 பார்லிமெண்டு அதிகாரிகள்: அங்கத்தினர் உரிமைகள்

**பார்லிமெண்டு சபைகள்:** ராஜாங்க சபை கலைக்கப்படமாட்டாது. ஆனால், இரண்டு வருஷங்களுக்கு ஒரு தடவை அந்தச் சபையிலுள்ள மொத்த அங்கத்தினர்களில் மூன்றில் ஒரு மடங்கு பேர் அங்கத்தினர் பதவியிலிருந்து விலகுவார்கள். அவர்கள் விலகுவதால் காலியாகும் ஸ்தானங்களுக்கு மீண்டும் தேர்தல் நடைபெறும். அதாவது இரண்டு வருஷங்களுக்கு ஒரு முறை மூன்றில் ஒரு மடங்கு விகித அங்கத்தினர்கள் புதிதாகத் தேர்ந்தெடுக்கப் படுவார்கள்.

ஜனங்களின் சபை அல்லது பார்லிமெண்டின் ஆயுட்காலம் அதன் முதலாவது கூட்டத்திலிருந்து ஐந்து ஆண்டுகள் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஐந்து ஆண்டுகள் முடிவடைந்ததும் அந்தச் சபை கலைந்துவிட்டதாகவே கருதப்படும். எனினும், இந்தியக் குடியரசுத் தலைவர் (பிரஸிடெண்ட்) ஓர் அவசரப் பிரகடனத்தின் மூலம் பார்லிமெண்டின் ஆயுட்காலத்தை மேற்கொண்டு ஒரு வருஷத்துக்கு நீடிக்கலாம். அவ்வாறு நீடித்து விடுக்கும் பிரகடனம் ரத்தான ஆறு மாதங்களுக்கு மேல் அதன் ஆயுட்காலத்தை எவ்விதத்திலும் நீடிக்க யாருக்கும் அதிகாரம் இல்லை.

ராஜாங்க சபை அங்கத்தினரின் குறைந்த பட்ச வயது முப்பதாகவும், பார்லிமெண்டு அங்கத்தினரின் குறைந்த பட்ச வயது இருபத்தைந்தாகவும் இருக்க வேண்டும். முப்பது வயதுக்குக் குறைந்தவர் ராஜாங்க சபைத் தேர்தலில் அபேட்சகராகவும், இருபத்தைந்து வயதுக்குக் குறைந்தவர் பார்லிமெண்டு தேர்தலில் அபேட்சகராகவும் நிற்கக்கூடாது.

மேற்படி தேர்தல்களில் அபேட்சகராக நிற்பவர் இந்தியப் பிரஜையாக இருக்க வேண்டும்; பார்லிமெண்டு விதிக்கும் சட்டத்தில் குறிப்பிட்ட மற்ற யோக்கிய தாம்சங்களும் உடையவராக இருக்க வேண்டும்.

பார்லிமெண்டும் ராஜாங்க சபையும் வருஷந்தோறும் இரண்டு தடவையாவது கூட்டப்பட வேண்டும். ஒரு கூட்டம் முடிந்த ஆறுமாதங்களுக்குள்ளாகவே மற்றொரு கூட்டமும் கூட்டப்பட வேண்டும்.

பார்லிமெண்டையோ, ராஜாங்க சபையையோ அல்லது இரண்டு சபைகளையும் சேர்த்தோ தமக்கு உசிதமாகத் தோன்றும் இடத்திலும் காலத்திலும் கூட்டக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. மேற்படி சபைகளின் கூட்டத்தை ஒவ்வொரு தடவையும் முடிக்கவும், பார்லிமெண்டை அடியோடு கலைக்கவும் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

பார்லிமெண்டிலோ, ராஜாங்க சபையிலோ விவாதத்தில் இருக்கும் மசோதா அல்லது வேறு ஏதாவது விஷயத்தைப் பற்றிக் குடியரசுத் தலைவர் சபைக்குச் செய்தி அனுப்பலாம். அவ்விதம் அனுப்பும் பட்சத்தில் மேற்படி சபைகள் அந்தச் செய்தியில் குறிப்பிட்டுள்ளபடி தாமதமின்றி நடந்துகொள்ள வேண்டும்.

ஒவ்வொரு தடவையும் பார்லிமெண்டும் ராஜாங்க சபையும் கூடும்போது, இரண்டு சபையினரும் சேர்ந்த கூட்டத்

தில் குடியரசுத் தலைவர், சபை கூடுவதன் காரணங்களைத் தெரிவிக்க வேண்டும்.

விவாத நேரம், முதலில் விவாதிக்க வேண்டிய விஷயங்கள் முதலியவை பற்றி விதிகள் ஏற்படுத்தப்படும்.

ராஜாங்க சபையிலோ, பார்லிமெண்டிலோ, இரண்டும் சேர்ந்த கூட்டத்திலோ பேச ஒவ்வொரு மந்திரிக்கும் இந்தியாவின் அட்டர்னி ஜெனரலுக்கும் உரிமை உண்டு. அவற்றின் நடவடிக்கைகளிலும் கலந்து கொள்ள அவர்களுக்கு உரிமை உண்டு; எனினும் வோட்டுக் கொடுக்க உரிமையில்லை.

**பார்லிமெண்டு அதிகாரிகள்:** ராஜாங்க சபையின் அக்ராசனரே இந்தியக் குடியரசின் உபதலைவராக இருப்பார்.

ராஜாங்க சபை அச்சபையின் அங்கத்தினர்களிலேயே ஒருவரை அதன் உப அக்ராசனராகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

ராஜாங்க சபையின் உப அக்ராசனர் தமது பதவியை ராஜிநாமா செய்வதாயின், எழுத்து மூலம் ராஜிநாமாக் கடிதத்தை அக்ராசனரிடம் சமர்ப்பிக்கவேண்டும். உப அக்ராசனருக்குத் திறமையில்லை என்றோ அல்லது அவர்மீது நம்பிக்கையில்லை என்றோ, ராஜாங்க சபையில் ஆஜராகியுள்ள அங்கத்தினர்களில் பெரும்பாலோர் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுவதன் மூலம் அவரைப் பதவியிலிருந்து விலக்கலாம். ஆனால், அத்தகைய தீர்மானம் கொண்டுவரக் குறைந்த பட்சம் பதினாலு நாட்களுக்குமுன் அறிவிக்கவேண்டும்.

ராஜாங்க சபை அக்ராசனர் பதவி காலியாக இருந்தாலோ, அல்லது அவர் குடியரசின் உபதலைவர் என்ற முறையில் தலைவரின் அலுவல்களைக் கவனித்து வந்தாலோ, உப அக்ராசனர் மேற்படி சபையின் அக்ராசனராக இருந்து காரியங்களைச் செய்து வருவார். உப அக்ராசனர் பதவியும் காலியாக இருக்குமாயின், தலைவரால் நியமிக்கப்படும் அச்சபையின் அங்கத்தினர் ஒருவர் அக்ராசனரின் அலுவல்களைக் கவனித்து வருவார்.

அக்ராசனர் சபைக்கு வரமுடியாவிடில், அந்த ஸ்தானத்தில் உப அக்ராசனர் இருப்பார். உப அக்ராசனரும் வரமுடியாவிடில் சபை தீர்மானிக்கும் வேறு அங்கத்தினர் யாராவது அப்போது மாத்திரம் அக்ராசனர் ஸ்தானத்தை வகிப்பார்.

பார்லிமெண்டு சபையோர் அச்சபையின் அங்கத்தினர்களில் இருவரை முறையே சபா நாயகராகவும் (பார்லிமெண்டு தலைவர்) உதவி சபா நாயகராகவும் தேர்ந்தெடுப்பார்கள்.

பார்லிமெண்டில் அங்கத்தினராக இருக்கும் வரையில்தான் அவர்களுக்கு மேற்படி ஸ்தானங்களை வகிக்க உரிமையுண்டு.

சபாநாயகர் உதவி சபா நாயகரிடமும், உதவி சபாநாயகர் சபா நாயகரிடமும் ராஜிநாமாக் கடிதத்தைச் சமர்ப்பித்துத் தங்களுடைய பதவியை ராஜிநாமா செய்யலாம். திறமையின்மை அல்லது அவர்கள்மீது நம்பிக்கையின்மை காரணமாகப் பார்லிமெண்டில் பெரும்பாலோர் கண்டனத் தீர்மானம் நிறைவேற்றுவதன் மூலம் அவர்கள் பதவியிலிருந்து விலக்கப்படலாம். எனினும் அத்தகைய தீர்மானம் கொண்டுவரப்போவதாகப் பதினாலு நாட்களுக்கு முன்னதாகவே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்.

பார்லிமெண்டு கலைந்த உடனே சபா நாயகர் பதவியிலிருந்து விலக மாட்டார். புதிய பார்லிமெண்டின் முதல் கூட்டம் வரையில் அவர் அப்பதவியில் இருப்பார்.

சபாநாயகர் ஸ்தானம் காலியாக இருந்தால், உதவி சபாநாயகரோ, உதவி சபா நாயகர் ஸ்தானமும் காலியாக இருந்தால், குடியரசுத் தலைவர் நியமிக்கும் பார்லிமெண்டு அங்கத்தினர்களில் ஒருவரோ சபாநாயகராக இருப்பார்.

இந்த அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் அரசியல் நிர்ணய சபைத் தலைவருக்கு என்ன சம்பளமும் அலவன்ஸ் தொகையும் கொடுக்கப்பட்டதோ அதே போல, பார்லிமெண்டு சபாநாயகருக்கும் ராஜாங்க சபை அக்ராசனருக்கும் சம்பளமும் அலவன்சும் கொடுக்கப்படவேண்டும்.

1947-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 15-ந் தேதிக்கு முன் அசெம்பிளி உதவி சபா நாயகருக்கும் ராஜாங்க சபை உப அக்ராசனருக்கும் எவ்வளவு சம்பளமும் அலவன்சும் கொடுக்கப்பட்டதோ அதே போலப் பார்லிமெண்டு உதவி சபாநாயகருக்கும் ராஜாங்க சபை உப அக்ராசனருக்கும் சம்பளமும் அலவன்சும் கொடுக்கப்பட வேண்டும்.

பார்லிமெண்டிலும் ராஜாங்க சபையிலும் அல்லது மேற்படி இரு சபைகள் அடங்கிய கூட்டத்திலும் பெரும்பாலான வோட்டுகளைக் கொண்டே எவ் விஷயமும் முடிவாகும். சர்க்கார் கட்சியிலும் எதிர்க் கட்சியிலும் சமமான வோட்டுகள் கிடைத்தபோது மாத்திரமே ராஜாங்க சபை அக்ராசனருக்கோ, பார்லிமெண்டு சபா நாயகருக்கோ வோட்டுக் கொடுக்க உரிமையுண்டு. மற்றச் சமயங்களில் அத்தகைய உரிமை இல்லை.

பார்லிமெண்டிலோ ராஜாங்க சபையிலோ உள்ள மொத்த அங்கத்தினர்களில் குறைந்த பட்சம் ஆறில் ஒரு மடங்கு பேராவது அந்தந்த சபையில் ஆஜராகி யிருக்க வேண்டும். அதற்குக் குறைவான அங்கத்தினர்களே வந்திருக்

தால், சபைத் தலைவர் சபையை ஒத்தி வைக்க வேண்டும்; அல்லது ஆறில் ஒரு மடங்கு அங்கத்தினர்களாவது வந்து சேரும் வரையில் சபைக் கூட்டத்தை நிறுத்தி வைக்க வேண்டும்.

**யோக்யதாம்சங்கள்:** பார்லிமெண்டிலும் ராஜாங்க சபையிலும் உள்ள ஒவ்வொரு அங்கத்தினரும் சபையில் அமருவதற்கு முன் குடியரசுத் தலைவருடைய அல்லது அவரால் நியமிக்கப்பட்டவருடைய முன்னிலையில், இந்திய அரசியல் சட்டப்படி நம்பிக்கையுடனும் விசுவாசத்துடனும் தமது கடமையைச் செய்வதாகப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும்.

பார்லிமெண்டு, ராஜாங்க சபை அல்லது மாகாண சட்ட சபை இவைகளில் ஒன்றில் மாத்திரமே ஒருவர் அங்கத்தினராக இருக்க முடியும். அதாவது ஒருவரே மேற்படி மூன்று சபைகளிலுமோ அல்லது இரண்டு சபைகளிலுமோ அங்கத்தினராக இருக்கக் கூடாது.

ராஜாங்க சபை அல்லது பார்லிமெண்டு அங்கத்தினர் ராஜிநாமா செய்வதாயின், ராஜிநாமாக் கடிதத்தை முறையே அக்ராசனரிடமோ அல்லது சபாநாயகரிடமோ சமர்ப்பிக்கவேண்டும்.

அங்கத்தினர் சபையின் அனுமதியின்றி அறுபது நாட்கள் வரையில் ஒரு கூட்டத்துக்கும் வராமலிருந்தால், அவருடைய ஸ்தானம் காலியாகிவிட்டதென்று சபை பிரகடனம் செய்யலாம். எனினும் சேர்ந்தாற்போல் நாலு நாட்களுக்கு மேல் சபை ஒத்திவைக்கப்படுமாயின், அந்த நாட்கள் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படமாட்டாது.

மந்திரிகளைத் தவிர, இந்திய சர்க்கார் அல்லது மாகாண சர்க்கார்களில் சம்பளம் பெற்றுக்கொண்டு உத்தியோகம் வகிப்பவர்கள், சித்த சுவாதீனம் இல்லாதவர்கள், விடுதலை செய்யப்படாத 'இன்ஸால்வெண்ட்' நபர்கள், வெளிநாட்டு சர்க்காரிடம் விசுவாஸமோ அல்லது அவர்களுடன் தொடர்போ உள்ளவர்கள் முதலியோர் பார்லிமெண்டு அல்லது ராஜாங்க சபைகளில் அங்கத்தினராக இருக்க யோக்கியதை யற்றவர்களாவர்.

விசுவாஸப் பிரமாணம் எடுத்துக் கொள்ளாதவரோ, அல்லது சட்டப்படி அங்கத்தினர் பதவிக்குத் தகுதியற்றவர்களோ சபையில் உட்கார்ந்தாலும் அல்லது வோட்டுக் கொடுத்தாலும் அத்தகையோர் அவ்விதம் செய்யும் ஒவ்வொரு நாளும் ஐந்நூறு ரூபாய் விகிதம் சர்க்காருக்குக் கொடுக்கவேண்டும். மேற்படி தொகை அவர் இந்திய சர்க்காருக்குக் கொடுக்க வேண்டிய கடனாகக் கருதப்படும்.

**அங்கத்தினர் உரிமைகள்:**—பார்லிமெண்டு நடவடிக்கை விதிகளுக்கு உட்பட்டு அச்சபையில் பேச்சு சுதந்திரம் உண்டு.

அங்கு அங்கத்தினர்கள் நிகழ்த்தும் பிரசங்கங்களை யொட்டியோ, அந்தச் சபைகளுடைய அதிகாரத்தின் கீழ்ப் பிரசுரமாகும் மேற்படி பிரசங்கங்கள் அடங்கிய வெளியீடுகளை யொட்டியோ, யாரும் எவ்வித நடவடிக்கையும் எடுக்க முடியாது.

அப்போதைக்கப்போது பார்லிமெண்டு இயற்றும் சட்டங்களின் மூலம் அங்கத்தினரின் உரிமைகள் நிர்ணயிக்கப்படும். அவ்விதம் நிர்ணயிக்கப்படும் வரையில் பிரிட்டிஷ் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்குள்ள உரிமைகள் இந்திய பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கும் உண்டு. பார்லிமெண்டு அங்கத்தினர்களைப் போல் பார்லிமெண்டு நடவடிக்கைகளிலும் கமிட்டிகளிலும் கலந்து கொள்ளும் நிபுணர்கள் போன்ற விசேஷ நபர்களுக்கும் அத்தகைய உரிமைகள் உண்டு.

அப்போதைக் கப்போது பார்லிமெண்டினால் நிர்ணயிக்கப்படும் சம்பளமும் அலவுன்சும் பெற அங்கத்தினர்களுக்கு உரிமை யுண்டு. அவ்விஷயமாகப் பார்லிமெண்டில் சட்டம் நிறைவேறும் வரையில், இந்த அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்களுக்கு என்ன சம்பளமும் அலவுன்சும் உண்டோ அதே சம்பளமும் அலவுன்சும் கொடுக்கப்பட்டு வரும்.

---

## மாட்டார்கள்!



மனைவி:—உங்கள் ஆபீசில் லீவே கிடையாதா? வீட்டில் யாராவது செத்துப்போனால் கூட லீவு விட மாட்டார்களா?

கணவன்:—அதற்கும் லீவு விட்டுத் தொலைக்க மாட்டார்கள். நான் ஜனன மரண ஆபீசில் அல்லவா வேலை செய்கிறேன்?



# கந்தசாமியின் அத்தை

சுபஸ்ரீ

ரயில் ஓடிக் கொண்டிருந்தது!

முடிவற்ற நினைவுப் பாதையில் மனதைச் செலுத்திப் பொழுதைக் கடத்திக் கொண்டிருந்த கந்தசாமியின் காதுகளில் பிரயாணிகளின் பேச்சு விழாமலில்லை.

"மரணத்திற்குப் பின் மனிதன் என்ன ஆகிறான்?" என்ற விசித்திரக் கேள்வியைப் போட்டு வைத்தார் ஒருவர்.

"ஆகிறது என்ன? உரிய புகழை அவன் அடைகிறான்!" என்றார்.

இரண்டாவது பேர்வழி, சற்றுக் கடுமையாக "அப்படியென்றால்...?" என்றார்.

"உயிரோடிருக்கும் வரை அவனது உண்மைத் திறனைத் தெரிந்துகொள்ளாத கண்மூடி உலகம் அவன் மறைந்த பிறகு ஓலமிடத் தொடங்குகிறது. உதாரணமாக இந்தப் புஸ்தகத்தின் ஆசிரியரையே எடுத்துக் கொள்ளுங்களேன். அவர் இறந்த பிறகு அவருக்குப் புகழ்மாலை சாற்றியுள்ள புண்ணியாத்மாக்கள் அவர் வாழ்ந்த காலத்தில் கவனித்தார்களா? வாழ்ந்த காலத்தில் வரவேண்டிய புகழை, மரணம் கொண்டு வருகிறது. அதனால் தான் ஞானிகள் சாவை வரவேற்கிறார்கள்.......!" என்று அவர் கார சாரமாகப் பேசிக்கொண்டே போனார்.

கந்தசாமியின் மூளை குழம்பியது. அத்தையின் சாவினால் முன்பே குழம்பிப் போன அவனது இதயத்திற்கு அதிர்ச்சி அளித்தது, பின்னவரின் வேதாந்தம்.

"வாழ்நாளில் ஏற்படாத முக்யத்வத்தை மரணம் கொண்டு வருகிறது!" என்று கூறி முடித்தார் அவர்.

இந்த வாக்கியங்களில்தான் எவ்வளவு உண்மை நிரம்பிக் கிடக்கிறது. மறைந்து போன அத்தையின் வாழ்விற்கும், இந்த வாழ்க்கைத் தத்துவத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பை நினைத்துப் பார்த்தபோது அவனது சோக முகத்தில் வறண்ட சிரிப்பொன்று தோன்றியது.

• • •

பாரேதி அத்தை சுகப்படப் பிறந்தவளல்ல; அவள் வாழ்க்கையில் பட்டதெல்லாம் முடிவற்ற கஷ்டங்கள்; அனுபவித்ததெல்லாம் எல்லையற்ற துன்பங்கள்! இல்லாவிட்டால் நாலும் உள்ள இடத்தில் வாழ்க்கைப்பட்டும் கொஞ்ச காலத்திற்குள்ளேயே நெற்றிக் குங்குமத்தை அழித்துக் கொண்டு திரும்பி வந்திருக்க மாட்டாள்! புக்ககத்திலிருந்து திரும்பி வந்தாள் என்றால் வெறுங் கையோடு அல்ல; சின்னஞ்சிறு வீடும், கையில் சிறிது ரொக்கத்துடனும்தான். அதுபோதும், அந்த ஒற்றை ஜீவனின் வாழ்க்கை சௌகரியமாகக் கழிவதற்கு. ஆனால் அவள் சும்மாயிருந்து விடவில்லை. வாத்ஸல்யம் மிகுந்த அவள், அனாதரவாகப் பெற்றோரை இழந்து நின்ற கந்தனை — தனது சகோதரன் மகனை — எடுத்து வளர்க்க ஆரம்பித்தாள். அந்தச் சோனிக் குழந்தையின் வளர்ச்சிக்காக அவள் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமல்ல!

கந்தசாமியின் ஹைஸ்கூல் படிப்பு முடியுமுன்பே ரொக்கப் பணம் தீர்ந்து விட்டது. வீட்டை விற்க விரும்பாத

அத்தை, தள்ளாத காலத்தில் உடலை வருத்தி, ஊரிலுள்ள பெரிய மனிதர்கள் வீட்டில் உழைத்து, கந்தசாமியின் கல்லூரிப் படிப்பைப் பூர்த்திசெய்தாள்.

"பி. ஏ." என்ற இரண்டெழுத்து விருதுகள் கிடைத்தவுடன் பழைய நண்பன் ஒருவன் உதவியால் பம்பாயை அடைந்த கந்தசாமி குமாஸ்தாவாக உரு வெடுத்து விட்டான். தனது துன்ப வாழ்வின் விடிவுகாலம் நெருங்கிவிட்டது என்ற எண்ணத்தோடு அத்தை கந்தசாமியின் கலியாணப் பேச்சிலும் இறங்கினாள். அவனது படிப்பிற்கு அவ்வப்போது ஒத்தாசை செய்த உள்ளூர் வக்கீலின் பெண்ணிற்கு முடித்து வைக்கலாம் என்று நினைத்தாள். அப்போதுதான் அதற்கு முற்றிலும் மாறாகக் கந்தசாமி தனது பம்பாய் வாழ்க்கையில் உதவிசெய்த நண்பனின் சகோதரியையே மணம்செய்து கொள்ளத் தான் உத்தேசித்திருப்பதாக எழுதிவிட்டான். இளமை முதல் அவனுக்காக உழைத்து ஓடாகத் தேய்ந்த அத்தையின் உதவிக்குக் கைம்மாறு காணோம்! இடையே தோன்றிய ஒருவனுக்கு இத்தனை மதிப்பாம், கைம்மாறும்!

அத்தைக்கு மனம் இடிந்து விட்டது. 'தன் வயிற்றில் பிறந்த பிள்ளையாக இருந்தால் இப்படிச் செய்வானா? என்ன இருந்தாலும் கந்தசாமி தன் உதிரத்துப் பிள்ளை இல்லை அல்லவா!' என்ற நினைவு அப்பொழுதுதான் தோன்றியது.

பம்பாயில் தனது தாம்பத்ய வாழ்க்கையை ஆரம்பித்த கந்தசாமி ஆன மட்டும் அத்தையைத் தன்னோடு வந்து தங்கும்படி வற்புறுத்தினான். ஒரேயடியாக மறுத்து விட்டாள் அவள். வளர்த்த பாசம் ஒரு பக்கம் அடித்துக் கொண்டாலும்கூட நொந்த உள்ளத்தில் வைராக்யம் புகுந்துகொண்டுவிட்டது. கிராமத்து மண்ணிலேயே ஊறிப்போன அந்த ஜீவன், வீட்டின் பெயரைச் சொல்லிக்கொண்டு, கிராமத்திலேயே தங்கிவிட்டது!

• • •

"அத்தைக்கு அபாயம்: உடனே புறப்பட்டு வரவும்" என்று கடிதம் வந்த போது கந்தசாமி கலகலத்து விட்டான். அத்தையின் அபரிமிதமான வாத்ஸல்யத்தையும், தற்போதைய அவளது அனாதரவான நிலையையும் எண்ணியபோது அவன் கண்களில் நீர் மள மள வென்று பெருகிற்று. உடனே புறப்படுவது என்ற தீர்மானத்தோடு மனைவியிடம் விஷயத்தைப் பிரஸ்தாபித்தான்.

உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லை. கிராமாந்தரத்து மனுஷாள் ஒன்றுமில்லாததற்கெல்லாம் பிரமாதப்படுத்தி விடுவார்கள்!" என்று தன் அபிப்பிராயத்தை வழங்கினாள், அவனது சகதர்மிணி.

"என்ன இருந்தாலும் அந்திய காலத்தில் நாம் அருகிலில்லாதபோது இறந்து வைத்தால்...?"

"ஒண்ணும் கவலைபடாதிங்கோ! உங்க அத்தை அந்தக்காலத்து மனுஷி. பிராயச்சித்தம் பண்ணினப்புறம்கூடப் பிழைச்சு எழுந்திடுவா, கல்லு போன்ற உடம்பு அல்லவா!"

கந்தசாமியின் மனம் அந்த வார்த்தையை ஏற்றுக் கொள்ளவில்லை!

"கஷ்டமாயிருக்கு. போயிட்டு வர்ரதுன்னா லேசாகவா இருக்கு? இந்த ரயில் கூட்டத்திலே யார் இடிபடறது? இங்கேயிருந்து ஒரு கோடி உங்க கிராமம். அங்கே போய் அத்தையைப் 'பார்த்துட்டு' வர்ரதுன்னா சும்மாவா? யாருகிட்ட பணம் இருக்கு?"

'வாஸ்தவம்' என்றுதான் கந்தசாமியின் மனதில் பட்டது. இவ்வளவு தூரம் பணத்தைச் செலவழித்துக் கொண்டு அத்தையைப் 'பார்க்க'ப் போய் வருவது என்றால் சிரமமான பிரச்னைதான். அதற்காக அத்தையைப் பாராமலே இருந்து விடுவதா?......போய் அழைத்துக்கொண்டு வந்து விடலாம் என்றாலோ அந்தப் பிடிவாதக்காரி கிராமத்தை விட்டு நகரமாட்டாளே! வயதினால் உடல் தேய்ந்து விட்டால்கூட அசையாத வஜ்ர இதயத்தில் வைராக்யம் வேர் விட்டிருக்கும்போது இலேசில் இசைந்து விடுவாளா?

ஆனாலும் அதற்காகக் கந்தசாமி சும்மா இருந்து விடவில்லை. அன்றைக்கு ஆபீசுக்குப் போனதுமே இருபது நாட்களுக்கு லீவு கோரி மனு ஒன்று சமர்ப்பிக்கத்தான் செய்தான்.

"அத்தைக்கு உடம்பு சரியில்லை என்பதற்காகவா லீவு? நல்ல வேலை! அடுத்த வீட்டுப் பாட்டி என்பதற்காக இல்லையே!" என்று ஏகத்தாளமாகக் கூறி மானேஜர் எக்காளமாகச் சிரித்தார். திகைத்துப்போன கந்தசாமி மறு வார்த்தை பேசாமல் மனுவோடு திரும்பி வந்து விட்டான்.

அடுத்த இரண்டு நாட்களுக்கெல்லாம் அத்தைக்கு 'உடம்பு தேவலை' என்ற சேதி வந்த போது தான் கந்தசாமிக்குத் தெம்பு வந்தது. "நான்தான் அப்போதே சொன்னேனே, உங்கள் அத்தைக்கு ஆயுசு கெட்டியென்று!" என்று ஆரம்பித்து விட்டாள் மனைவி.

ஆனால் அடுத்தவார இறுதிக்குள்ளேயே அத்தையின் சாவைத் தாங்கிக் கொண்டு அப்படி ஒரு தந்தி வருமென்று

அவன் எதிர்பார்க்கவில்லை. கந்தசாமி கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்து விட்டான்!

"நன்னாயிருக்கு; இப்படி பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்துட்டா முடியுமா? மேற்கொண்டு ஆக வேண்டிய காரியங்களைப் பார்க்க வேண்டாமா? உடனே புறப்பட வேண்டியதுதான்!" என்று தூண்டினாள் மனைவி.

"அவளே போன பிறகு அங்கு போய் என்ன செய்ய?" என்றான்.

"நீங்க சொல்றது தேவலேயே! கிராமத்திலே உள்ளவா என்ன நினைப்பா? சின்ன வயசிலேயிருந்து உங்களை வளர்த்த அத்தையின் சாவுக்குக்கூட வரலைன்னு ஊரார் தூற்றமாட்டாளா? பணத்தைப் பார்த்தா முடியுமா? அந்த வீட்டுக்கும் தான் ஒரு வழி பண்ணிட்டு வர வேண்டாமா? அவளுக்குக் 'காரியங்களை' செய்யறதுக்கு உங்களை விட்டா யார் இருக்கா? இங்கெல்லாம் பண்றதைவிடப் பிறந்து வளர்ந்த கிராமத்திலே செய்தால்தான் 'அந்த ஆத்மா'வுக்கும் திருப்தி ஏற்படும்......" என்றாள்.

பேசுவது மனைவிதானா என்ற சந்தேகம் கந்தசாமிக்குப் பிறந்தது. "கந்தனைக் காண வேண்டும்" என்ற அத்தையின் இறுதிக்கால ஆசையைத் தாங்கி வந்த கடிதத்திற்கு அசைந்து கொடுக்காத மனைவி இன்று மனம் வேறு பட்டுக் காணப்படுவானேன்?

"கலியாணம் என்றாலும் பரவாயில்லை; துக்க காரியங்கள் விட்டுக் கொடுக்கப் படாது, ஸார்!" என்று புத்திமதி



உபாத்தியாயர்:— ஒருவன் ஒரு நாளைக்கு எட்டுமணி நேரம் வேலை செய்ய எட்டணாக் கூலி கேட்கிறான். அவன் ஒரு நாளைக்கு இருபத்தி நாலு மணி நேரமும் வேலைசெய்ய என்ன கேட்பான்?

ஒரு மாணவன்:—மறுநாளே 'ஸிக் லீவ்' வேணுமென்று கேட்பான்!

கூறினார், அன்று ஆபீஸ் போனதும் அநுபவப்பட்ட நண்பர் ஒருவர். "போன வாரமே லீவு கொடுக்க மறுத்து விட்டான் இனி எங்கே தரப் போகிறான்?" என்ற அவநம்பிக்கையோடுதான் மானேஜரை அணுகினான், கந்தசாமி. எதிர்பாராத விதமாக அவர் அநுமதி அளித்ததோடு "மிஸ்டர் கந்தசாமி, மரணம் யாருக்கும் வரக்கூடியதுதான்!" என்று தேற்ற ஆரம்பித்தபோது, கந்தசாமியின் ஆச்சரியம் பன்மடங்காயிற்று. வாழ்வுப் பாதையினின்று நழுவிக் கொண்டிருந்த அத்தையின் அந்திகால இஷ்டத்தை நிறைவேற்றி வைக்க ஊருக்குச் செல்ல அநுமதி அளிக்காத மானேஜர், இன்று அவள் உயிர் மாய்ந்து மரண வாயிலை அடைந்த பிறகு, அவளது சாவுக் கிரியைகளை செய்துவிட்டு வர அனுப்பி வைக்கிறார்.

உலகத்தின் இந்த விசித்திரப் போக்கை எண்ணி வியந்துகொண்டே அன்றிரவு மனைவியுடன் கந்தசாமி ரயிலேறினான்.

ஆனால்......?

கந்தசாமிக்காகவே வாழ்நாள் முழுவதும் போராடிய அத்தை கடைசியில் அவனைப் பார்க்காமலேயே, அவன் அருகில் இல்லாமலேயே மண்ணோடு மண்ணாய் மறைந்து போனாள். அந்த நொந்த ஜீவனின் புண்பட்ட உள்ளத்திலே எத்தனை கோடி எண்ணங்கள் தோன்றி மறைந்தனவோ? எத்தனை ஆயிரம் ஆசைகள் குமிழியிட்டுச் சென்றனவோ? என்னென்ன சொல்ல நினைத்தாளோ? விரும்பி யிருந்தால் கந்தசாமி, சாவின் பயங்கர இருள் அவளை விழுங்கு முன்பே, எலும்புக் கூடாகப் போன அந்த உடலில் உயிர் துடிதுடித்துக் கொண்டிருந்த போதே, அவளைப் பார்த்திருக்கலாம். உள்ளம் குளிர அவளும் கண்ணை மூடியிருப்பாள். தூரமும், பணமும் அப்படிச் செய்ய வொட்டாமற் தடுத்தாற்கூடத் தனது சஞ்சல புத்தியும் ஒருவிதத்தில் காரணந்தானே? வாழ்வின் விளிம்பைத் தாண்டி, மரணத்தின் எல்லைக் கோட்டை அவள் அடைந்த பிறகு, இப்போது புறப்பட்டுப் போகவேண்டுமென்று என்ன அவசியம்? அப்படியானால் கந்தசாமி முக்கியத்வம் அளித்துள்ளது அத்தையின் வாழ்வுக்கா? அல்லது அவள் சாவுக்கா? இந்தப் பிரச்னைக்கு முடிவு காணாமல் கந்தசாமி திகைத்தான்.

ரயிலில் யாரோ, "வாழ்நாளில் ஏற்படாத முக்யத்வத்தை மரணம் கொண்டு வருகிறது!" என்று சொன்ன வார்த்தைகள் அவன் காதில் ஒலித்தன.

ரயில் ஓடிக் கொண்டிருந்தது!

# வட்ட மேஜை



## ஒரு தீர்ப்புச் சொல்லுங்கள்!

ஜூன் மாதம் 5-ந் தேதி 'கல்கி' இதழில் 'அறிவுக்கு விதோசாரம்! நாட்டுக்கு ஓர் அவமானம்!' என்பதைப் படித்தேன். ஜாதி மத வித்தியாசம் பாராட்டுவது கூடாது என்று தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது. தற்போது கிராம ரேஷன் சம்பந்தப்பட்ட வரையில் நமது சர்க்கார் ஜாதி, மத வித்தியாசத்தை நன்றாகக் கைக்கொண்டிருக்கிறதினால் கிராமத்திலுள்ள ஏழை எளியவர்கள் படும் துன்பம் அளவிடமுடியாத நிலையிலிருக்கிறது. உண்ணும் உணவில் ஜாதிமத வித்தியாசம் உபயோகப்படுத்தி யிருப்பது நியாயந்தானா என்பதைப் பற்றி ஒரு தீர்ப்புச் சொல்லுங்கள்.

நாட்டில் கட்டுப்பாடும் பங்கீடும் இருந்து வருகிறது. நாட்டு மக்களுக்கு அவசியமான பொருள்கள் கிடைப்பது அரிதான காலத்தில் இம்முறை புகுத்தப்பட்டது.

பங்கீடு முறையை நமது சென்னை சர்க்கார் கிராம ரேஷனில் எப்படிக் கையாண்டு வருகிறது என்பதைப் பாருங்கள்.

கிராம உணவு ரேஷன் முறையில் மூன்று பிரிவுகள் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். ஒன்று அரிசிக் கார்டு; இரண்டாவது கலப்புக் கார்டு; மூன்றாவது தானியக் கார்டு.

'பணக்காரர்களுக்கும், வியாபாரிகளுக்கும், பிராமணர்களுக்கும், மகமதியர்களுக்கும், சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும், உபாத்தியாயர்களுக்கும் அரிசிக் கூபன் கொடுக்க வேண்டும், நெசவாளர்கள் போன்றவர்களுக்குக் கலப்புக் கார்டு கொடுக்க வேண்டும்' என்று கிராம அதிகாரிகளுக்கு உத்தரவு வந்திருக்கிறது. உத்தரவுப்படியே உணவுக் கார்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

கிராமத்திலுள்ள ஏழை எளியவர்கள் அனைவருக்கும் கொடுக்கப்பட்டிருப்பது புன்செய் தானிய உணவுக் கார்டுதான்.

மூன்றாவது பிரிவில் கார்டு பெற்றிருக்கும் மக்களுக்கு ரேஷனில் நல்ல தானியம் இப்போது கிடைப்பதில்லை. மக்காச் சோளம் அல்லது கோதுமை கொடுக்கப் படுகிறது. அரிசிக் கார்டு வேண்டுமென்று விண்ணப்பம் எழுதிக் கொண்டுபோய்த் தாலுக்கா சப்ளை ஆபீஸரிடம் கேட்டால் அரிசிக் கார்டு கொடுக்கச் சட்டத்தில் இடமில்லை என்கிறார். வற்புறுத்திக் கேட்டால் "அரிசிக் கார்டு கொடுக்க முடியவில்லை" என்று விண்ணப்பத்தில் திருப்பி எழுதிக் கொடுத்து விடுகிறார்.

"ஏழையென்றும் அடிமையென்றும் எவனுமில்லை ஜாதியில்
இழிவு கொண்ட மனிதரென்பர் இந்தியாவில் இல்லையே"

என்று பாரதியாரால் பாடப்பட்ட இந்த நாட்டிலே, திருவள்ளுவரும், திருக்குறளும் பிறந்த இந்த நாட்டிலே, மாந்தருக்குள் தெய்வமான காந்தியடிகள் பிறந்து பணி செய்து, புனிதம் பெற்ற நாட்டிலே உணவுப் பங்கீட்டு முறையில் எத்தகைய தவறு நிகழ்ந்து வருகிறது என்பதைப் பார்த்தீர்களா?

உதாரணமாகக் கோயமுத்தூர் ஜில்லாவை வைத்துக் கொண்டு பார்ப்போம்.

தற்போது பத்து அவுன்ஸ் உணவு எல்லோருக்கும் கிடைக்கிறது. ஆனால் முதல் பிரிவிலுள்ள உயர்ந்த ஜாதிக்காரர்களுக்கும், செல்வர்களுக்கும் 8 அவுன்ஸ் அரிசியும், 2 அவுன்ஸ் மக்காச் சோளமும் கிடைக்கிறது. இரண்டாவது கலப்புக் கார்டுக்கு 4 அவுன்ஸ் அரிசியும் 6 அவுன்ஸ் மக்காச்சோளமும் கிடைக்கிறது. மூன்றாவது பிரிவு கூபன் பெற்றுள்ள தாழ்ந்த ஜாதிக்காரர்களுக்கும், எளியவர்களுக்கும் கிடைப்பது 8 அவுன்ஸ் மக்காச் சோளமும் 2 அவுன்ஸ் அரிசியும் தான்.

உயிர்வாழ உண்ணும் உணவிலும் ஜாதி, மத ஏழை, பணக்கார வித்தியாசமா?

ஏழை எளியவர்களான எங்களுக்குக் கொடுக்கப்படும் உணவில் பாதி அரிசியும், பாதி தானியமும் கிடைத்தால் கூடப் போதும்.

ஜாதி மதச் சண்டை காரணமாகவே நமது மகாத்மாஜியை இழந்து விட்டோம். மாந்தருக்குள் தெய்வமான தேசப் பிதாவை இழந்தும் கூட, நாட்டு ஆட்சி முறையில் ஜாதி வித்தியாசம் ஏனோ? ஜனநாயக ஆட்சியில் இத்தகைய குறைகள் இருக்கலாமா?

அறிவுக்கு விதோசாரம்! நாட்டுக்கு ஓர் அவமானம்' என்றால், உணவுப் பங்கீட்டில் ஜாதி, மத, ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசம் உபயோகப்படுத்துவது அறிவுக்கு அவமானமா? அல்லது நாட்டுக்கு அவமானமா? என்பதைப் பற்றி ஓர் தீர்ப்புச் சொல்லுங்கள்.

பத்மாவதிபுரம்,
11—6—49 எம். சின்னசாமி

[ரேஷன் கார்டுகள் கொடுக்கும் விஷயத்தில் சாதி-மத வித்தியாசம் காட்டப்படக் கூடாது. அதிகாரிகளை விசாரித்ததில் சாதி மத வித்தியாசப்படி பிரிக்கவில்லை என்றும், புன்செய் தானியம் சாப்பிட்டுப் பழக்கமுள்ள வகுப்பாருக்கு அந்தத் தானியம் அதிகமாகக் கொடுக்கப்படுகிறது என்றும், எல்லாருக்கும் கொடுக்க அரிசி இல்லாமையால்தான் இப்படிச் செய்யவேண்டி வருகிறது என்றும் சொல்கிறார்கள். எந்த சாதி, மத வகுப்பினர் ஆனாலும் அரிசிச் சோறு பழக்கப்பட்டவர்களுக்கு அரிசி ரேஷன் கார்டுதான் கொடுக்கப்பட வேண்டும் என்பதில் சந்தேகமில்லை. இந்தமாதிரி கேடுகளுக்கு மூல காரணமான அரிசிப் பஞ்சம் நீங்கி ரேஷன் முறை அடியோடு ஒழியும் காலை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம். —ஆசிரியர்]

○●○

## கேட்க முடியவில்லை!

வேறொரு காங்கிரஸ் மாகாணத்திலும் நடைபெறாத ஒரு சம்பவம் சென்னையில் நடந்திருக்கிறது. ஒரே ராஜீயக் கட்சியில் மூன்றுமுறைத்

தலைவரைப் பொறுக்கி, தற்காலம் மூன்றாவது பிரதமரை நியமித்திருக்கிறது. தவிர சில மந்திரிகளின் மேலுள்ள ஊழல் குற்றச் சாட்டுதலை விசாரிக்க அகில இந்திய காங்கிரஸ் காரியதரிசி பிரயாணம் செய்வதாக சமாசாரமும் இந்தியா முழுவதும் பரவியிருக்கிறது.

சில மந்திரிகள் பேரிலுள்ள குற்றச்சாட்டு தலைப் பற்றி தொலைவிலுள்ள ஒரு ஆசிரியர் ஒன்றும் எழுத முடியாது. எழுதவும் கூடாது. ஆனால் வருஷா வருஷம் பிரதமரை மாற்றிய தின் காரணத்தை விசாரிக்க வேண்டியது ஒவ்வொரு தென்னிந்தியனின் கடமையாகும்.

சென்னை மாகாணத்தில் காங்கிரஸில் பல சமமான உழைப்பாளர்களை ஏவிக் காரியங்களைச் சாதிக்கும் மாபெரும் தலைவரில்லாத குறையா? அல்லது கிரேக்க தேசத்தைப்போல் சுயநலத்தையும் தம் சொந்தப் பெருமையையுமே நாடி ஒருவருக்கொருவர் போட்டி போடுவதால் நாட்டின் நன்மைக்காக ஒத்துழைக்கும் சக்தி குறைந்துவிட்டதா?

ஆசியாவிலே எங்கு பார்த்தாலும் பெருங் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. சீனு, பர்மா, மலேயா, இந்தோனேஷியா முதலிய நாடுகள் இம் மாபெரும் கிளர்ச்சியில் அகப்பட்டுத் தத்தளிக்கின்றன. இந்திய தேசம் ஒன்றுதான் பலப்பட்டு, சமாதானத்திற்கும் சுதந்திரத்திற்கும் அறிகுறியாகச் சோபிக்கிறது.

வருகிற பத்து வருஷங்கள் உலகிற்கும் சுயேச்சையடைந்த இந்தியாவிற்கும், வெகு முக்கியமான காலம். பாகிஸ்தான் தேசம் நமக்கு இடைவிடாது தொந்தரவு கொடுத்து நம்பிக்கைத் துரோகமான காரியங்கள் செய்துகொண்டுதா னிருக்கும்.

ஆகவே இத்தருவாயில் நாட்டில் ஒற்றுமையும், ராஜீய நைபுண்யமும் சைன்னியங்களின் தயாரான நிலைமையும் அவசியமாகும்.

இம்மாதிரி சமயத்தில் வருஷா வருஷம் பிரதமரைக் காலை வாரி விட்டு மந்திரி சபை மாற்றுவது ராஜதந்திரத்தைக் காட்ட வில்லை.

இந்திய சர்க்காரிலும் சரி, வெளி நாட்டு அலுவல்களிலும் சரி, புத்திசாலித்தனத்திற்கும் நாணயத்திற்கும் ராஜீய அலுவல்களை வெகு திறமையுடன் நடத்துவதற்கும் தனிப்பட்ட கௌரவம் தென்னிந்தியருக்கு அளிக்கப்பட்டு வருகிறது. இவ்வளவு மேதாவிகளைக் கொடுத்த தென்னாட்டில் மந்திரிசபை இவ்வளவு பொறுப்பற்ற சச்சரவுகளில் காலம் கழிக்கலாமா?

ஒரு காலத்தில் இந்தியாவுக்கே முதன்மையாக ராஜாஜியின் கீழ் மாகாண சுய ஆட்சி நடத்திக் காட்டிய பெருமை சென்னைக்கு இருந்தது. இப்பொழுது அந்தக் கௌரவம் இங்கு ஐக்கிய மாகாணத்து ஸ்ரீ கோவிந்த வல்லப பந்துக்கு ஏற்பட்டிருக்கிறது.

மத்திய சர்க்காரின் அமைப்பைக் கவனித்தால் காங்கிரஸ் கட்சியிலில்லாத சில மந்திரிகள் நம் பிரதம மந்திரியின் கீழ் வேலை செய்யும் விஷயம் தென்படும். மாகாண கவர்னர்கள் நியமனத்திலும், வெளி நாட்டு இலாகா உத்தியோகஸ்தர் தேர்ந்தெடுப்பதிலும், திறமையும், வாய்மையும் சேர்ந்து எவரிடமிருக்கிறதோ அவர் நியமிக்கப்பட்டிருக்கிற உண்மை விளங்கும்.

தென்னிந்திய காங்கிரஸ் மந்திரிகளைப் பற்றி வட இந்தியாவில் பேசப்படுவதை எந்தத் தென்னிந்தியராலும் கேட்டுச் சகிக்க முடியவில்லை. தென்னாடு ஒற்றுமைப்பட்டுப் பலப்படவேண்டும்.

அலகாபாத்
13—6—49 கே. ஆர். ஆர். சாஸ்திரி

○●○

## விமோசனம் உண்டா?

நான் எஸ். எஸ். எல். ஸி. பரிக்ஷை எழுதின மாணவன். பரிக்ஷையின் முடிவை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். முடிவும் ஞாயிற்றுக்கிழமை வந்தது. ஆவலுடன் என் நெம்பர் இருக்கின்றதா எனப் பார்த்தேன். இல்லை. தலை சுற்றிற்று. கண் இருண்டது. அப்படியே நின்றுவிட்டேன். எவ்வளவு நேரம் நின்றேனோ தெரியாது. பிறகு சுதரித்தேன். கண்ணீர் சொரிந்தேன். என்ன செய்து என்ன பயன்? எனக்கு ஆறுதல் கூற யாரும் முன் வரவில்லை. அதற்குப் பதில் என்னை எல்லோரும் நிந்திக்க ஆரம்பித்தனர்.

''உன்னை எவ்வளவு கஷ்டப்பட்டு படிக்க வைத்தேன். இப்படிச் செய்துவிட்டாயே!'' என்கிறார் அப்பா. வீட்டைவிட்டுச் சற்று வெளியில் போனாலாவது மனம் நிம்மதியடையும் என்று நினைத்துக் கொண்டு வாயிலில் காலை வைத்தாலோ ''பரீட்சையில் பெயில் ஆகிவிட்டு ஊர் சுற்றப் போகிறாயோ?'' என்கிறாள் அம்மா. அப்படியே வீட்டுக்குள் வந்து கதைப் புத்தகமாவது படித்து மனம் ஆறுதலடையலாம் என்று நினைத்து கதைப் புத்தகம் எடுத்தாலோ ''பரீட்சையில் பெயில் ஆகிவிட்டுக் கதைப் புத்தகம் படிக்கிறாயா?'' என்று சொல்லிக் கொண்டு கதைப் புத்தகத்தைப் பிடுங்கிக் கொண்டு போகிறாள் அக்கா. இதேபோல் என்னை எல்லோரும் அவமதிக்க ஆரம்பித்தனர்.

இந்த நரகவேதனைப் படுவதைவிட எங்கேயாவது போய் இறந்துவிடுவதே மேல் எனத் தோன்றுகிறது. எனக்கும் என்னைப்போல் கஷ்டப்படும் மாணவர்களுக்கும் விமோசனம் ஏதாகிலும் உண்டா?

கோவை
14—6—49 ஸி. ஆர். பாலசுப்ரமணியன்

[பரீட்சையில் தேறுவது பற்றி யார் என்ன சொன்னாலும் அதைப் பொருட்படுத்த



மனைவி:—சினிமாவுக்குப் போகலாம் என்றீர்களே! நான் எந்தப் புடவை உடுத்திக் கொள்ள வேணும் என்று சொல்லுங்கோ!

கணவன் (எரிச்சலுடன்):—நீ எல்லாப் புடவைகளையும் வேணுமானாலும் ஒருமிக்க உடுத்திக் கொள். சீக்கிரம் அந்த டிராயரை மூடித் தொலை!

வேண்டாம். பரீட்சையில் தேறாதவர்கள் பலர் வாழ்க்கையில் மகத்தான காரியங்களைச் சாதித்திருக்கிறார்கள். இந்த எண்ணம் உங்களைப் போன்றவர்களுக்குத் தைரியத்தையும் உற்சாகத்தையும் அளிக்கட்டும்.

—ஆசிரியர்.]

○●○

## மனோபாவம் மாறுமா?

நானும் ரொம்ப நாளாகப் பொறுத்துப் பார்த்து வந்திருக்கிறேன். இன்று இதைப் பற்றி உங்களுக்கு எழுதியே விடுவதென எழுதுகிறேன்.

இந்தக் கதாசிரியர்கள் பெண்களைப் பற்றிக் கொண்டிருக்கும் மனோபாவம் எப்போது மாறும்? இவர்கள் பெண்களைப் பற்றி எழுதவேண்டும் என்று நினைக்கும்போது அவள் புடவைக்காகக் கணவனிடம் குலுக்கி, மினுக்கி அல்லது இரண்டு சொட்டுக் கண்ணீர் விட்டு சாகசம் செய்வதாகவே சித்திரிக்கிறார்கள். உண்மையில் பார்க்கப்போனால் நூற்றுக்கு ஒருத்திகூட இம்மாதிரி புடவைக்காகச் சண்டித்தனம் செய்யமாட்டாள். வர வரப் பெண்கள் எவ்வளவோ முன்னேற்றமும் அறிவு வளர்ச்சியும் பெற்று வருகிறார்கள். ஒரு குடும்பத்தில் கணவன் மனைவி இருவருக்கும் சம பொறுப்பு ஏற்படுகிறது. அதுவும் மாமியார் மாமனார் இல்லாத சம்சாரமாய் இருந்தால் இந்தப் பொறுப்பு அதிகரிக்கிறது. வரவு செலவு முதலியன நன்றாகத் தெரிய வருகிறது. இப்போதுதான் எவ்வளவு வந்தாலும் சாப்பாட்டிற்கே பற்றாக்குறையாய் இருக்கிறதே. ஆதலால் "எதிர்வீட்டு லக்ஷ்மியும், அடுத்த வீட்டு அலமேலுவும் புடவை வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். எந்தக் கடன் எப்படியோ போகிறது. எனக்கும் புடவை வாங்கிக் கொண்டுதான் மறுகாரியம்" என்று எவள் சொல்லப் போகிறாளோ தெரியவில்லை. "எது எப்படியோ இருக்கிறது. நீ வாங்கிக்கொள்" என்று புருஷனும் பார்த்துப் பிரியமாய்ச் சொன்னால்கூட நிலைமையை உத்தேசித்து தாமே வேண்டாமென பலவந்தத்துடன் எவ்வளவோ தடவை மறுக்கவேண்டி இருக்கிறது. ஸ்திரீகளின் விஷயத்தில் கதை ஆசிரியர்கள் மனோபாவம் அவசியம் மாறவேண்டும்.

சேலம்
4—6—49 சாரதா

○●○

## தர்ம சங்கடம்

"கல்யாணத்தைப் பண்ணிப் பார், வீட்டைக் கட்டிப் பார்" என்று சொன்னவர்கள் ஏனோ "அட்மிஷன் வாங்கிப் பார்!" என்று உரைக்க மறந்து விட்டார்கள்! கல்லூரிக்கு அப்ளிகேஷன் பாரத்தை அனுப்பிய பின்புதான் சிபார்சுக்காகப் பெரிய மனிதர்களைத் தேடி அலைகிற கஷ்டமிருக்கிறதென்றால், அதை அனுப்பு முன்னும் வேறொரு கஷ்டமிருக்கிறது. உதாரணமாக வைத்தியக் கல்லூரியில் சேர விரும்பும் மாணவன் ஒருவன் தாசில்தார்களையும் டாக்டர்களையும் தேடி அலைய வேண்டியிருக்கிறது. இவர்களைப் பேட்டி கண்டு கெஞ்சிக் கூத்தாடி நேடிவிடி சர்டிபிகேட் (Nativity certificate) மெடிகல் சர்டிபிகேட் (Medical certificate) முதலியவற்றைப் பெற வேண்டும். இவை கிடைத்தாலும் மறுமுறை அம்மை குத்தப்பட்ட சர்டிபிகேட் (Re-vaccination certificate) கிடைப்பதுதான் குதிரைக் கொம்பாக இருக்கிறது. ஹெல்த் இன்ஸ்பெக்டர் (Health Inspector) களிடம் சென்றால், "இது அம்மை குத்தும் காலம் அல்ல, அப்பா! இப்போது மருந்து கிடையாது. ஜூலை மாதம் வா. அம்மை குத்திய பிறகு சர்டிபிகேட் தருகிறேன்" என்கிறார்கள். ஜூலை மாதம் சர்டிபிகேட் கொடுத்து என்ன புண்ணியம்! அப்ளிகேஷனை ஜூலை மாதம் இரண்டாம் தேதிக்குள் அனுப்பியாக வேண்டுமே.

மேற்படி சர்டிபிகேட்டை அனுப்பாவிடில் அதைச் சாக்கிட்டு நம் அப்ளிகேஷன் நிராகரிக்கப்படும். "காலேஜில் அட்மிஷன் கிடைத்த பிறகு Re-vaccination certificate ஐக் கொடுத்தால் போதும்" என்று அதிகாரிகள் உத்தரவிட்டால் மாணவர்களுக்கு மேற்கூறிய தர்மசங்கடம் ஏற்படாதல்லவா?

கடையம்
13—6—49 க. நா. பாலகிருஷ்ணன்

○●○

## ஐயோ, மெத்தக் கடினம்!

"இருப்பதா? இறப்பதா? அதுதான் பிரச்னை" என்று ஷேக்ஸ்பியர் எழுதி வைத்திருப்பதாகக் கேள்வி. ஆனால் இதே கேள்வியை இன்று சென்னை மாகாணவாசி ஒவ்வொருவரும் கேட்கின்றனரென்றால் அது மிகையாகாது. சென்னையில் வாழ்க்கை நடத்துவது வரவர மெத்தக் கடினமாகி விட்டது. எங்கு பார்த்தாலும் பஞ்சமும் பிணியும் காணப்படுகிறது. பணப் புழக்கம் குறைந்து

விட்டது. ஓட்டலை நம்பி வாழ்பவரின் நம்பிக்கையில் மண் விழுந்து விட்டது. அவர்கள் குடும்பத்தினர் நடுத்தெருவிலே நிற்கப் போவது 'இன்றோ நாளையோ' என்பது மாறி 'இப்பவா அப்பவா' என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது.

ஆயிரம் ரூபாயிலிருந்து இரண்டாயிரம் ரூபாய் வரை ஊதியம் பெறும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படி ஏற்றம்! ஆனால் அதே சமயத்தில் ஓட்டல் சோற்றுக்கு வரி! இந்த வரியால் பாதிக்கப்படுபவர்கள் மிகப் பலர் என்பது மட்டுமல்ல, இவ் வரியால் விளையும் தீமைகளும் மிகப் பல. "நொண்டிக் கழுதைக்குச் சறுக்கிவிட்டது சாக்கு" என்றபடி இனி ஓட்டல் முதலாளிகள் பலகார உருவங்களைச் சிறுத்து, தரத்தைக் குறைத்து, விலையை ஏற்றி, என்போன்ற நடுத்தர வகுப்பினரின் வயிற்றில் மண்ணடிப்பதற்குச் சரியான சூழ்நிலை ஏற்படப் போகிறது!

இந்தப் புண்ணிய கைங்கரியத்தைச் செய்யப் போகும் மந்திரி கனம் கோபால் ரெட்டி அவர்களுக்குக் கோடி நமஸ்காரம்!

மேலூர்
11-6-49 மூ. இராமதாஸ்.

[ஓட்டல் சொந்தக்காரர்கள் ஓட்டல்களை மூடிவிடப் போவதாகவே பயமுறுத்தி இருக்கிறார்கள்! அப்படி மூடிவிட்டால் உங்களைப் போன்றவர்களின் கதி 'என்ன ஆகப் போவதோ' தெரியவில்லை! —ஆசிரியர்]

○●○

## அதிகாரிகளின் அசிரத்தை

தங்கள் 29-5-49 பத்திரிகையிலும் 5-6-49 பத்திரிகையிலும் ரயில்வே போக்குவரத்து பற்றியும் பொது ஜனங்கள் ரயில்வே அதிகாரிகளுடன் ஒத்துழைக்க வேண்டும் என்றும் அதிகாரிகளால் விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. இதை ஆதரித்துத் தாங்களும் 29உ இதழில் எழுதி இருக்கிறீர்கள்.

ஆனால் ரயில்வே அதிகாரிகளிடம் ஒப்படைக்கும் சாமான்கள் ஒழுங்காக வந்து சேருவதில்லையே! இதற்கு என்ன செய்வது? உதாரணமாக, நான் 7-6-49 அன்று தர்மபுரி அவுட் ஏஜன்ஸி ஆபீஸில் தஞ்சாவூரிலிருந்து எனக்கு வந்த ஒரு காய் கறிக் கூடைப் பார்ஸலை டெலிவரி எடுத்தேன். கூடையின் மேல் பாதி தனியாக இருந்தது. கூடையில் காய்கறிகள் பாதி கூடைக்கும் குறைவாகவே இருந்தன. இங்கு உள்ள கிளார்க்கைக் கேட்டால் "கூடை இப்படித்தான் இங்கு வந்து சேர்ந்தது. நான் ஒன்றும் தொடவில்லை. வழியில் யாரோ விஷமம் செய்திருக்கிறார்கள்" என்று சொல்கிறார். இதற்கு யாரிடம் சொல்வது? ரயில்வே அதிகாரிகளுக்கு எழுதினால், "தஞ்சாவூரில் பார்ஸல் புக் செய்ய ஒப்புக் கொண்டபொழுது Risk Note எழுதி வாங்கி இருக்கிறது; ஆகையால் ரயில்வே கம்பெனியார் கூடைக்குத்தான் ஜவாப்தாரியே தவிர, கூடையின் உள்ளே இருக்கும் சாமான் குறைவது பற்றித் தெரியாது" என்ற பதில்தான் கிடைக்கும். ஆகையால் தாங்கள், பொது ஜனங்களை ரயில்வே அதிகாரிகளுடன் ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொண்டது போலவே, ரயில்வே அதிகாரிகளையும், இப் பத்திகளையும், மனச்சாட்சியுடன் தங்களிடம் ஒப்படைக்கும் சாமான்களைப் பத்திரமாகவும், தாமதம் இல்லாமலும் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி கேட்டுக் கொள்ள வேண்டும்.

தர்மபுரி
9—6—49 எஸ். குப்புராவ்

○●○

## காலம் வரும்!

பஞ்சப்படி உயர்வுவேண்டும் என்று கேட்ட என்.ஜி.ஓ.க்களைப் பார்த்து கனம் ப்ரதமரும், மகாகனம் நிதி மந்திரியும், "கோச்சியைப் பார்! திருவாங்கூரைப்பார்!" என்றார்கள். ஆனால் தங்கள் சம்பளத்தை உயர்த்திக் கொண்டவோ, அல்லது ஆயிரம் ரூபாய்க்குமேல் சம்பளம் வாங்கும் உத்தியோகஸ்தர்களுக்குப் பஞ்சப்படி கொடுக்கவோ இவர்கள் மேற்படி சமஸ்தானங்களைப் பார்க்கவில்லை. தங்களைத் தாங்களே பார்த்துக் கொண்டார்கள். தங்கள் அருகில் இருந்து 'தர்ப்தனம்' புரியும் பெரிய கைகளையும் பார்த்துக் கொண்டார்கள். ஆபீஸில் புழுங்கும் அன்றாட உத்தியோகஸ்தர்களுக்குத் திருவாங்கூரைப் போய்ப் பார்க்கப் பணம் ஏது? இவர்கள் வேண்டுமென்றால் போய்ப் பார்க்கலாம். செலவுக்குப் பணம் சர்க்கார் கொடுக்கிறார்கள். "ஹனுமான்" இருக்கவே இருக்கிறார்!

பஞ்சப்படி உயர்வுதான் இல்லையே, பஸ் கட்டணத்தை அதிகப் படுத்தாதீர்கள் என்றால், "நடந்து போ" என்கிறார் மதிமந்திரி. மத்ய சர்க்காரின் ஒரு ரயில்வே "காங்கி" ஆள் பெறும் கூலிகூடப் படித்துப் பட்டம்பெற்ற ஒரு என்.ஜி.ஓ. பெறவில்லை. சம்பளம் கட்டவில்லை என்றால் "வேலையை ராஜினாமா செய்து விட்டுப்போ!" என்று சொல்வார் நமது வரி மந்திரி. ஆனால் என். ஜி. ஓ. க்கள் வேலையை விட்டுப் போகமாட்டார்கள். இருக்கிற இடத்தில் அழுத்தமாக இருந்துகொண்டு தங்கள் உரிமைகளைப் பெறுவார்கள். ஒரு தடவை வழிதவறி விட்டார்கள். இனி வழி பிசகமாட்டார்கள். மந்திரிகள் கையில் பேனா இருக்கிறது — தற்காலிகமாகத்தான். ஆனால் அன்றாட உத்தியோகஸ்தர்களான என். ஜி. ஓ.க்களின் கையில் பேனா என்றும் எப்பொழுதும் இருக்கும்.

தி. நகர்
7—6—49 என். ஜெ.

○●○

## தான் தோன்றித்தனமா, ஜனநாயகமா?

விலைவாசிகள் இக்காலத்தில் விஷம்போல் ஏறிவருகிறது. இதனால் ஏழை மக்களும், நடுத்தர மக்களும் மிகவும் பாதிக்கப்படுகின்றனர். இந்நிலையில் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பண்டங்கள் மீது ஏற்கெனவே உள்ள வரிகள் போதாது என்று அதிகரிக்கப்படுகின்றன. இதனால் மக்கள் அதிகக் கஷ்டங்களுக்குள்ளாவது நிச்சயம். இப்பொழுது ஹோட்டல் சாப்பாடு மீதும் வரி விதிக்கப் பட்டிருப்பதால், அங்கு சாப்பிடுபவர்களுக்குப் பெருந் தொல்லை ஏற்படும். பொதுவாக மாகாண மக்கள் அனைவருமே கஷ்டப்படுவர் என்பது நிச்சயம். இது ஜனநாயக அரசாங்கம் செய்யும் காரியமல்ல. ஏழை மக்கள் வயிற்றில் அடிப்பது மிகவும் அநீதமான செய்கை. தான் தோன்றிகள் செய்யும் செய்கை. இப்பொழுது நடப்பது ஜனநாயக ஆட்சியானால் இவ் வரிகளை உடனே நீக்கவேண்டும்.

சிவகங்கை
9—6—49 ஆர். ஸ்ரீரங்கராஜன்

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'ஒரு தீர்ப்புச் சொல்லுங்கள்!' என்ற கடிதம் எழுதிய பத்மநாபபுரம் ஸ்ரீ எம். சின்னசாமிக்கும், 'விமோசனம் உண்டா!' என்ற கடிதம் எழுதிய கோவை சி. ஆர். பாலசுப்ரமண்யனுக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.




# நீபா

கூந்தல் தைலத்தின் பரிசுத்தமான இனிய பரிமளம் உங்கள் மேன்மையான மனப் பாங்கிற்கு பொருத்த மாக அமைந்திருக்கிறது

GANGA WORKS ADYAR MADRAS 20

## கங்கா ஓர்க்ஸ்

அடையாறு : மதராஸ்-20




# 'ஜீவான்ஜன்'

சரீரத்தின் மேல் தடவி
தேய்ப்பதற்கும் ஆவியாக
சுவாசிப்பதற்கும்
உபயோகரமானது
ரஸாயனக் களிம்பு, மிருக
கொழுப்பு சேராதது

தயாரிப்பவர்கள்
ஜீவான்ஜன் லாபொரட்டரீஸ் லிட்
மதராஸ்-14




ஸோல் ஏஜன்டுகள்
கே.கே.பிள்ளை & கோ
ராயப்பேட்டை, மதராஸ்-14

# ஜீவான்ஜன்

# உயர்ந்த ரக (லீவர்) கை கெடியாரங்கள்

எல்லா கடிகாரங்களும் ஸ்விஸ் தயாரிப்பு: படத்திலுள்ளபடி அழகிய அமைப்பு: ஜுவெல்கள் பொருந்தியவை: பலமுடன் நீடித்து உழைக்கக் கூடியவை, பளபளப்பான குரோமியம் கேஸ்: வெகு கணக்காக மணிகாட்டும். ஐந்து வருஷங்கள் உத்தரவாதம். ஒவ்வொன்றுக்கும் ப்ளாஸ்டிக் பாண்டு. தபால் செலவு அணா 12. பிரத்தியேகம்.



நெ. 801. வட்டமான தட்டை வடிவம்—சைஸ் 10½

| | | | | |
|---|---|---|---|---|
| பளபளப்பான குரோமியம் | | ரு. 14/8 | உயர்ந்தது | ரு. 15/8 |
| 5 ஜுவெல்கள் | ,, | 18/8 | உயர்ந்தது | 20/8 |
| 7 ,, | ,, | 24/- | ரோல்ட்கோல்ட் | 33/8 |
| 15 ,, | ,, | 35/- | ,, | 45/- |



நெ. 802. வட்டமான தட்டை வடிவம் சென்டர் செகண்டு 10½

| | | | | |
|---|---|---|---|---|
| பளபளப்பான குரோமியம் | | ரு. 18/8 | உயர்ந்தது | ரு. 18/8 |
| 5 ஜுவெல்கள் | ,, | 22 | ,, | 26 |
| 7 ,, | ,, | 30 | ரோல்ட்கோல்ட் | 40 |
| 15 ,, | ,, | 40 | | 50 |



நெ. 803. வளைந்த வட்டம் — சைஸ் 7½

| | | | | |
|---|---|---|---|---|
| 5 ஜுவெல்கள் | குரோமியம் | ரு. 25 | உயர்ந்தது | ரு. 30 |
| 5 ,, | ரோல்ட்கோல்ட் (10 வருஷ உத்தரவாதம்) | | | 35 |
| 7 ,, | குரோமியம் | 35 | ரோல்ட்கோல்ட் | 40 |
| 15 ,, | ,, | 45 | ,, | 55 |



நெ. 804. நீண்ட சதுரம், டைனோ — சைஸ் 7¾

| | | | | |
|---|---|---|---|---|
| 5 ஜுவெல்கள் | குரோமியம் | ரு. 28 | உயர்ந்தது | ரு. 32 |
| 5 ,, | ரோல்ட்கோல்ட் (10 வருஷ உத்தரவாதம்) | | | 38 |
| 7 ,, | குரோமியம் | 38 | ரோல்ட்கோல்ட் | 44 |
| 15 ,, | ,, | 50 | ,, | 58 |

பாக்கெட் கடிகாரம் ரு. 12 உயர்ந்தது ரு. 18 சிறந்தது ரு. 20. அலாரம் டைம்பீஸ் ரு. 16 உயர்ந்தது ரு. 18 சிறந்தது ரு. 20. பெரிய சைஸ் குரோமியம் டைம்பீஸ் (ஜப்பானில் செய்தது) ரு. 20 சிறந்தது ரு. 24.

**PARAGON WATCH CO., Post Box No. 11419 - CALCUTTA - 6 (K 1)**

---

# அமெரிக்கன் மாடல் ரிவால்வர்

## லைசென்ஸ் வேண்டியதில்லை




உங்கள் உயிரையும், சொத்தையும், மானத்தையும், துஷ்டர்கள், விலங்குகளின் தாக்குதல்களிலிருந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

வீட்டிலும், பிரயாணம் செய்கையிலும் இந்த அழகிய உறுதியான ரிவால்வர் உங்களுக்குச் சிறந்த, நம்பகமான நண்பனாக விளங்கும். ஒன்றன்பின் ஒன்றாக தானே 6 தரம் சுடுவதற்கு 6 ரவைகள் பொருந்திய இது, அசல் அமெரிக்கன் பிஸ்டல்களுக்குச் சமமானது. 15 அவுன்ஸ் கனமும், 9 அங்குல நீளமும் உள்ள இது தோட்டாவைக் கக்கிக் கொண்டு பயங்கர சப்தத்துடன் வெடிக்கிறது. இன்றே இதில் ஒன்றுக்கு ஆர்டர் கொடுங்கள், குறைந்த விலையுள்ள இந்த மெய்க்காப்பாளன் இன்றி ஒரு நாளும் இருக்காதீர்கள்.

| | | | |
|---|---|---|---|
| ரகம் நெ. | 222 | ரு. | 6/8 |
| ,, | 333 | ரு. | 7/8 |
| ,, | 444 | ரு. | 8/8 |

மேல்கொண்டு 4 டஜன் ரவைகள் விலை ரு. 4/8. பிஸ்டல் உறை கொண்ட தோல் பெல்ட் ஒன்றின் விலை ரு. 5/-. லூப்ரிகேடிங் ஆயில் ஒரு பாட்டில் விலை ரு. 1/- கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதுங்கள்.

**WILSON TRADING CORPORATION**

**P. B. 247. CAWNPORE (U. P.)**

# ஆ! என்ன குஷி!






புதுமை உணர்ச்சிக்கும் சரும ஆரோக்யத்திற்கும் மலபார் லிம்டா சோப்புதான் சிறந்தது!

சுத்தமான வேப்பெண்ணை சேர்க்கப்பட்டது!

FAS-461.

**VEGETABLE SOAP WORKS, CALICUT.**

*PROPRIETORS:* **SAIT N.P. & CO. LTD.**

*CALICUT-BOMBAY-2-MADRAS-1.*

---

விலை

## ரூ. 5/-



மிகக் கச்சிதமாக தனிமையாக இருக்கிறது! அதுதான் புதிய கோல்டன் ப்ளாட்டினம் பேனா! — வழுவழுப்பான ஸ்ட்ரீம் லைன் பாரல். பாதி மட்டும் வெளியிலுள்ள முனை, கனிப்புடன் இழுத்துத் திறக்குமாறு பளபளப்பான நிக்கல் வெள்ளியினால் செய்யப்பட்ட உறை இவைகளுடன் கூடியது நீலம்பச்சை, ஊதா, கரும் சிகப்பு வர்ணங்களில் கிடைக்கும். இந்த பிரபல பேனாக்களின் விற்பனை தாற்காலிகமாக மிகவும் குறைந்திருக்கின்றது. ஆனால் போதிய ஸ்டாக்குகள் பெருவாரியாக கூடிய சீக்கிரம் எதிர்பார்க்கப்படுகிறது. அதுவரையில் பொறுத்திருங்கள். மார்க்கெட்டில் போதிய அளவு சரக்கை அதிவிரைவில் கொண்டுவர எங்களால் கூடியவரை முயலுகிறோம்.

THE NEW GOLDEN

# Platignum

MADE IN ENGLAND

விற்பனை விவரங்களுக்கு சோல் ஏஜண்ட்டுகள்:

**முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்**

பம்பாய், கல்கத்தா, மதராஸ், புது டில்லி, கராச்சி, லாகூர், ரங்கூன், கொழும்பு



# காட்ஸ்வால்

அவர்கள் தேக சீதோஷ்ணத்தை சமப் படுத்துகிறது.



உஷ்ணவேளையில்
அவர்களை
குளுமையாகவும்
குளிர்ந்த வேளையில்
கதகதப்பாகவும்
வைத்திருக்கிறது!

தங்கள் குழந்தைகளை உஷ்ணவேளையிலும் சரி, விளையாட்டுச் சமயங்களிலும் சரி, குளுமையாக வைத்திருப்பதுடன் தேகப் பயிற்சிக்குப் பின் அல்லது குளிர்ந்த வேளையில் அவர்களுக்கு ஜலதோஷம் வராமல் காப்பாற்றவும் கூடியதோர் துணியைத் தான் எல்லாத் தாய்மார்களும் கோருவது. இதோ இப்புதிய ஜவுளி அவர்கள் கோரிக்கையை நிறைவேற்றுகிறது!

காட்ஸ்வால் இவ்விருவித பாதுகாப்பும் அளிப்பது அதன் அரிய நெசவுத்தன்மை காரணமாகத் தான். அதிலுள்ள ஆயிரக் கணக்கான சிறு துவாரங்களின் மூலம் உடம்போடு சேர்ந்தாற்போல் காற்றோட்டம் எப்போதும் ஏற்பட்டு தேக சீதோஷ்ணம் சம நிலையில் நிறுத்தப் படுகிறது. வியர்வையும் எளிதில் உலர்கிறது.

காட்ஸ்வால் அணிவதற்கு சுகமாகவும், அதி மென்மையான சரீரங்களுக்கும் மிருதுவாகவும் இருப்பது தவிர, பார்வைக்கும் அழகுதான். தாய்மார்கள் தங்களுக்கும் தங்கள் கணவர்களுக்கும் காட்ஸ்வால் உடையணிகளை கட்டாயம் விரும்புவர். அநேகவித வசீகரமான கெட்டிச்சாய நிறங்களிலும், கோடுகளுடனும், செக் மோஸ்தரிலும் கிடைக்கும்.

சலவைக் குறிப்புகள்: உலன் துணிமணிகளைப் போன்றே வெதுவெதுப்பான ஜலத்தில் சோப்புச் சீவல்கள் அல்லது வாஷிங் சோப்பால் சலவை செய்யவும்

தயாரிப்பவர்கள்:

## தி பெங்களூர் மில்ஸ்

தி பெங்களூர் உலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி, லிமிடெட். பெங்களூர் ஸிடி.

ஏஜண்டுகள், காரியதரிசிகள், பொக்கிஷதாரர்கள்:
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்.






—பிரபல
ஆடுமார்க்கையும்!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk. Madras



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாசனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளு குளுப்பையும், அலாதி சுறுசுறுப்பையும் அளிக்கிறது.



## டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.

கோவை, நீலகிரி ஜில்லாக்கள் அன் பாலக்காடுக்கு ஏஜண்டு:

B. பாலபட்டாபி

(Estd. 1933)

P. B. No. 182, கோயமுத்தூர்

மதராஸ் டிப்போ:

157, லாயிட்ஸ் ரோடு

ராயப்பேட்டை, சென்னை

---

## கேசரியின்

### மூன்று பிரசித்த மருந்துகள்

•

# லோத்ரா

**கர்ப்பாசய ரோக நிவாரணி**

சங்காதோஷம், கீல் வாயு, தூக்கமின்மை, அஜீரணம், மலச்சிக்கல், இருமல், காசம், தலைவலி, முதுகு வலி முதலிய வற்றைக் குணப்படுத்தும்.

•

# அம்ருதா

**ரத்த சுத்தி டானிக்**

ரத்த சோகை, அஜீரணம், மலச் சிக்கல், மந்தமான மூளை, பலவீனம், படபடப்பு, ஞாபகமின்மை, தெளிவற்ற கண் பார்வை, தலை சுற்றல், சரும ரோகங்கள் முதலிய வற்றைக் குணப்படுத்தும்.

•

# அர்க்கா

**சிறந்த ஜுர நிவாரணி**

இன்புளுயன்ஸா, டைபாய்ட், மலேரியா, முதலான ஜுரங்கள் குணமாகும். ஈரல் குலைக் கட்டிகளும் குணமாகும்.

•

விவரங்களுக்கு எழுதுங்கள்

## கேசரி குடீரம் லிட்.

ராயப்பேட்டை, மதராஸ் - 14

REGD. No. M. 4392



# வீட்டில் தயாரித்த
# பனீர் கட்லெட்
# டால்டாவில் செய்தால் சுவையிக்கதாயிருக்கும்!

5 கப் பாலை கொதிக்கவைத்து சில சொட்டுகள் எலுமிச்சஞ் சாறை பிழியவும். பால் பிரிந்ததும் அடுப்பிலிருந்து எடுத்து தனியாகவைக்கவும். உறைநீர் தெளிந்ததும் வடித்துவிட்டால் கெட்டியான பனீர் கிடைக்கும். (புளித்துப்போன பாலிலிருந்தும் மேற்கூறியபடி பனீர் எடுக்கலாம்). பனீரை மஸ்லின் துணியில் கட்டித்தொங்கவிடவும். சுமாருக உலர்ந்ததும் பச்சைமிளகாய் அல்லது மிளகு, பொடித்த சீரகம், ருசிக்குத் தகுந்த உப்பு இவைகளை கலக்கவும். கலவையின் மேல் பளு வைத்து சமமாக பரத்தவும். பனீர் கெட்டியானதும் சதுரம் சதுரமாக கத்தியால் நறுக்கவும். குழிவு குறைந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி சதுரக்கட்டிகளை சீக்கிரமாக பொரித்தெடுக்கவும். பனீர் கட்லெட்களை பொரித்த வெங்காயம், எலுமிச்சந்துண்டுகள் இவையோடு சூடாக பரிமாறவும். இதைப்போட்டு குழம்பு தயாரித்து சாப்பிட்டால் மிக ருசியாயிருக்கும்.

**எந்த உணவுகள் எளிதில் ஜீரணமாகின்றன ?**

*இலவசமான ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள் !*

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




HVM. 100-172 TM